

# கல்கி

ராக்ஷஸ
புரட்டாசி 12

செப்டம்பர் 28
1975

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



## முடியுமா, பாருங்கள்!

மேலேயுள்ள படத்தில் பத்து விதமான காகிதத் துண்டுகள் சிதறிக் கிடக்கின்றன. அவைகளில் இரண்டே இரண்டு துண்டுகள் மட்டும் ஒன்று போலிருக்கும். அந்த இரண்டு துண்டுகளும் எவை என்று கண்டு பிடிக்க முடிகிறதா பாருங்கள்.

(ஐடியா [illegible] : [illegible])

கீழேயுள்ளது ஒரு விநோதமான அரண்மனை. உள்ளே நுழைந்தவர் வெளியே வருவதென்பது இலேசான காரியமல்ல. சுவர்களில் முட்டி மோதிக் கொள்ளாமல் மேல் வாசலில் புகுந்து, திக்குத் தெரியாமல் திண்டாடாமல் கீழ் வாசல் வழியாக வர வேண்டும். எங்கே பார்க்கலாம் உங்கள் திறமையை!



கல்கி

மலர் 35

இதழ் 9



# அலை ஓய்ந்தபின் கடல் நீராடலா?

வினோபா அடிகளின் பிறந்த நாள் கூட்டத்தில் பேசிய ஸ்ரீமதி இந்திரா நாடு முழுவதும் மதுவிலக்கு அமுல்படுத்த இயக்கம் நடத்த வேண்டும் என்று கூறியிருக்கிறார்.

இயக்கம் நடத்தி மக்களை மனம் திருந்தச் செய்தபிறகு மது விலக்கைச் சட்ட ரீதியாக அமுல்படுத்துவதென்றால் அது அலை ஓய்ந்த பின் சமுத்திர ஸ்நானம் செய்வது போல்தான்.

மதுவிலக்கு இயக்கத்தைக் காந்திஜி நடத்தினார். அதை அந்நியர் ஆதிக்கத்துக்கு எதிராக ஒரு சக்தி வாய்ந்த சாத்துவீக ஆயுதமாகவும் பயன்படுத்தினார். அன்றையச் சூழலுக்கு ஏற்ற இயக்கம் இன்றைக்குச் சரிப்பட்டு வராது. இன்று நாடு முழுவதற்கும் மதுவிலக்கைச் சட்டபூர்வமாகக் கொண்டு வந்து விட்டுப் பிறகுதான் 'ஏன் கொணர்ந்தோம், எதற்காக இந்தச் சட்டம்' என்று வலுவான பிரசார இயக்கம் தொடங்கி நடத்த வேண்டும்.

அயல்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள் மீது பாரத்தைப் போட்டு விட்டும் மதுவிலக்கைச் சரியாக அமுல்படுத்த முடியவில்லை என்று நொண்டிச் சமாதானம் கூறிக் கொண்டும் இன்று பல ராஜ்யங்கள் மதுக் கடைகளை அனுமதித்திருக்கின்றன. அயல்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள் எல்லோரும் குடிகாரர்கள் அல்ல. குடித்துவிட்டுக் கூத்தாட அவர்கள் இங்கு வரவும் இல்லை. நம் நாட்டின் பண்பாட்டைப் புரிந்து கொள்ள ஆசைப்பட்டுத்தான் வருகிறார்கள். மதுவிலக்கு அந்தப் பண்பாட்டின் ஓர் அம்சம் என அறிந்தால் மகிழ்ந்து மதிப்பார்கள். மேலும் அவர்கள் மது அருந்த இங்கே தடை ஏதும் இருக்கப் போவதில்லை. அவர்களுக்கு உயர் ரக மது வகைகள் சுலபமாகக் கிடைக்க வசதி செய்வதில் சிரமமும் இல்லை.

பல மாநிலங்களில் மதுவிலக்கு அமுலாகாததற்கு உண்மைக் காரணம் மதுக் கடைகளால் அரசுக்கு ஏராளமான வருவாய் கிடைக்கிறது என்பதுதான். அதை இழக்க அவை தயாராயில்லை.

காந்திஜியை முன்னணியில் வைத்து, அவர் தலைமையை ஏற்று, அவர் சொற்படி போராடி, சுதந்திரம் பெற்றுத் தந்த காங்கிரஸ் இன்று ஆட்சியில் இருக்கும் ராஜ்யங்களில் மதுவிலக்கு இல்லை. எதிர்க்கட்சிகள் ஆள்கிற குஜராத், தமிழ்நாடு மாநிலங்களில்தான் மதுவிலக்கு !

அண்ணா, ராஜாஜி, காந்திஜி ஆகியோரின் மனத்துக்குகந்த காரியங்களைச் செய்வதால் தமிழகத்துக்குப் பொருளாதார ரீதியில் ஏற்படும் நஷ்டங்களைப் பாருங்கள்.

மதுவிலக்கு அமுல்படுத்துவதால் ஆண்டு ஒன்றுக்கு நஷ்டம் ரூ. 58 முதல் 60 கோடி.

லாட்டரியை ஒழித்ததால் ஆண்டு ஒன்றுக்கு ரூபாய் மூன்று கோடிக்கு அதிகமாக நஷ்டம்.

குதிரைப் பந்தயத்தை ஒழித்ததால் ஆண்டு ஒன்றுக்கு இரண்டு முதல் மூன்று கோடி ரூபாய் வரை நஷ்டம்.

இவை தவிர மக்கள் பலர் பக்கத்து மாநிலங்களுக்கு மதுவையும் குதிரைப் பந்தயத்தையும் நாடிப் போவதால் ஏற்படும் ஆரோக்கியக் கேடும் பொருளாதார நஷ்டமும் வேறு. இதே காரணத்தால் இங்கே மதுவிலக்கை நூறு சதவீதம் வெற்றிகரமாக நடத்த முடியாமல் காவல் படை படும் கஷ்டம். அத்துடன் இத்தனை வருவாய் நஷ்டத்தால் இந்த மாநிலம் பொருளாதார ரீதியிலும் தொழில் துறையிலும் துரித முன்னேற்றம் காண முடியாமல் ஏற்படும் நஷ்டத்தையும் சேர்க்க வேண்டும். இன்னும் இந்த வருவாய்களின் இழப்பால் அதை ஓரளவேனும் ஈடு கட்ட அரசு போடும் புதிய வரிகளால் மக்களுக்கு ஏற்படும் கஷ்டத்தையும் எண்ண வேண்டும். சமீபத்திய நகர்ப்புற நில வரி உயர்வை லாட்டரி ஒழிப்பின் உடன்

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்

வினைவாகவே கருதலாம். இன்னும் பல கடுமையான வரிகளையும் எதிர்பார்க்கலாம்.

இத்தனை கஷ்ட நஷ்டங்களைத் தமிழர்கள் தாங்கத் தயாராக இருக்கிறார்கள். ஆனால் காந்திஜி விரும்பிய கொள்கைகளுக்குச் செயலுருவம் கொடுத்ததற்காக அவர்கள் இவ்வளவு சுமையைத் தாங்க வேண்டுமா என்பதை மத்திய அரசு சிந்திக்க வேண்டும். இந்த மாநிலத்துக்கு ஒதுக்கப்படும் நிதி வசதிகளை அதிகரிக்க வேண்டும். மதுவிலக்கு காரணமாய் ஏற்படும் நஷ்டத்தை ஓரளவேனும் ஈடு செய்ய வேண்டும் என்ற கோரிக்கையை அனுதாபத்துடன் அணுக வேண்டும்.

காங்கிரஸ் ஆட்சியில் உள்ள எல்லா மாநிலங்களிலும் மதுவிலக்கு அமுலாக வேண்டும் என்று ஸ்ரீமதி இந்திரா உத்தர விடட்டும். நெருக்கடி நிலைப் பிரகடனம் இந்த நல்ல காரியத்தைச் செய்யஉதவட்டுமே?

விநோபாவின் பிறந்த நாள் போய் இதோ அண்ணாவின் பிறந்தநாள் வந்து கொண்டிருக்கிறது. ஒரு புதிய சமுதாயத்தின் பிறந்த நாளாக அது திகழட்டும்.

# என்ன சேதி?

## மகாகவிக்கு மாளிகை

"காணி நிலம் வேண்டும் என்று கேட்ட பாரதிக்கு மூன்று காணி நிலமே ஒதுக்கியுள்ளது தமிழக அரசு'' என்று கணக்குச் சொன்ன திரு ம.பொ. சி.; ''இந்தக் கணக்குத் தவறாயிருந்தால் என் மீது பாயாதீர்கள்! 'ஒரு காணிக்கு எத்தனை மனை?' என்று விசாரித்ததில் பல அபிப்பிராயங்கள் இருப்பது தெரிய வந்தது'' என்று சிரிப்புக்கிடையே கூறித் தப்பித்துக் கொண்டார்.



காணி நிலம் வேண்டியவன், அதனை எதற்காகக் கேட்டான் என்பதையும் பாரதிவிழாவில் பேசிய ம.பொ. சி. விளக்கினார்;

'' 'காணி நிலத்திடையே ஒரு மாளிகை கட்டித் தர வேண்டும்' என்றான் பாரதி. பாரதி — தாகூர் அரங்கம் அங்கே எழப் போகிறது. 'அங்கு கீற்றும் இளநீருமாய்த் தென்னை மரங்கள் வேண்டும்' என்றான். அரங்கைச் சுற்றி அருமையான தோட்டம் உருவாகப் போகிறது.

'' 'ஒரு பத்தினிப் பெண் வேண்டும்' என்றானே அந்த ஒரு கனவை இன்று நம்மால் நினைவாக்க முடியாமல் போகலாம்!'' என்று நகைப்புக்கிடையே சொன்னவர், அந்தப் பத்தினிப் பெண்ணை எதற்காகக் கேட்டான்



என்பதையும் விவரித்தார் : ''சரச சல்லாப மாக வீண் பொழுது போக்கவா ? இல்லை ! 'பாட்டுக் கலந்திடவே பத்தினிப் பெண் வேண்டும்' என்றான். 'கூட்டுக் களியினிலே கவிதைகள் கொண்டு தர வேண்டும்' என்றான். பாட்டும் கவிதைகளும் மட்டுமின்றி அரங் கிலே சகல கலைகளும் சிறக்கும். 'பாட்டுத் திறத்தாலே வையம் பாலித்திட வேண்டும்' என்றானே, அதுவும் நடக்கும்.''

'' அரங்கம் அமைய முழுமூச்சுடன் பாடு படுங்கள்'' எனப் பாரதியார் சங்கத்தினரைத் துணைத் தலைவர் திரு ம.பொ. சி. மூலம் கேட்டுக் கொண்ட முதல்வர், ''குறைவுபடும் நிதியினை அரசு கொடுத்து உதவும்'' என்றும் அன்று உறுதியளித்தார்.

பாரதி விழாப் புதுமைகள் இவ்விதழின் வேறு பல பக்கங்களிலும் இடம் பெற்றுள்ளன.

## சங்கீத வாரம் சிறக்கட்டும்

சர்வதேச சங்கீதவாரத்தையொட்டி வெளி யாகிற இந்தக் கல்கி இதழில் இசைமேதை யெஹூதி மெனுஹின் அவர்களின் கட்டுரை இடம் பெற்றிருக்கிறது. இந்த இசை வாரத் திலும் சிறப்பாக அக்டோபர் முதல் தேதி சங்கீத தினமாகவே அறிவிக்கப்பட்டுள்ளது.



சென்னையின் மிகப் புரா தனமான இசைச் சங்க மான மெட்ராஸ் மியூசிகல் அஸோஸியேஷன் இந்தச் சங்கீத வாரத்தைச் சிறப் பான விழாவெடுத்துக் கொண்டாடத் தீர்மானித் துள்ளது. விழாவைத் தொடங்கி வைக்க இ. நா. சபையின் துணைப் பிரதம காரியதரிசி திரு. ஸி. வி. நரசிம்மன் இசைந்திருக்கிறார்.

எத்தனையோ சிக்கலான நிர்வாகப் பொறுப்புக்களுக்கிடையில் மாறாத புன்னகை யும் பதற்றமில்லா மனமுமாக அவர் அமைதியாகப் பணியாற்ற அவரது கலையுள்ளம் வெகுவாக உதவுகிறது என்பதை அவரை நெருக்கமாக அறிந்தவர்கள் உணர்வார்கள். வாழ்க்கையையே கலையுணர்வோடு அமைத் துக் கொண்டதுடன் சிறந்த கர்நாடக இசைக் கலைஞராகவும் விளங்குபவர் திரு ஸி. வி. நரசிம்மன். அவர் விழாவை ஆரம் பித்து வைப்பது மிகவும் பொருத்தம். அன்று அதாவது செப்டம்பர் 29-ந் தேதி சங்கீத கலாநிதி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி கச்சேரி செய்கிறார். கன்னிமாரா ஹோட்ட லில் நடக்கும் இந்த விழாவில் தொடர்ந்து பலவித இசை நாட்டிய நிகழ்ச்சிகள் உண்டு என்றாலும் அக்டோபர் 2உ காந்திஜி ஜெயந்தி தினத்தைக் குழந்தைகளின் கலைநிகழ்ச்சி களுக்காக ஒதுக்கியிருப்பது குறிப்பிடத் தக்கது.

## 'முடிகொண்டான்'' மறைவு

சர்வ தேச இசை வாரம் என்று எண்ணி மகிழும் வேளையில் இசைமேதை ஒருவரது மறைவு குறித்து வேதனைப்படவும் செய் கிறோம்.

கர்நாடக சங்கீதத்தின் பல்வேறு அம்சங் களிலும் நிபுணர்களாய் விளங்கியவர்களிடம் பயின்று எல்லா அம்சங்களையும் கிரகித்துக் கொண்டு தன்னிகரற்றவராக விளங்கினார் முடிகொண்டான் ஸ்ரீ வேங்கடராம அய்யர்.



அபாரமான லய ஞானம் உடையவராயிருந்த நேரத்தில் சங்கீதத்தைப் பாவ பூர்வமாகப் பாட வேண்டியதன் அவசி யத்தை வலியுறுத்திச் சொன்னார். இசையின் லட்சியம் லட்சணம் ஆகி யவை குறித்துத் தீர்மானமான அபிப்பிரா யங்கள் கொண்டிருந்தார். அவருக்குத் தெரிந் திருந்த கீர்த்தனைகள் எண்ணிலடங்கா.

சங்கீத வித்வத் சபை மகாநாடுகளில் அவர் நிகழ்த்திய விளக்க உரைகள் இசை நிபுணர் களுக்குப் பெருவிருந்தாய் அமைந்தன. சில ஆண்டுகளுக்கு முன்னால் சிம்பநந்தன பல்லவி என்ற 108 அட்சரங்களுடன் அமைந்த அபூர்வ பல்லவியை அவர் இரண்டு கரங் களாலும் தாளம் போட்டுக் கொண்டு பாடி வித்வான்களை யெல்லாம் வியப்பில் ஆழ்த்தினார்.

அவரது மறைவால் வாடும் குடும்பத்தா ருக்கு மட்டுமின்றி இசை உலகுக்கே அனு தாபம் தெரிவிக்க வேண்டியவர்களாகிறோம்.

---

ராஜாஜி சிந்தனை

### ஆத்ம பலம் ஓங்கட்டும்!

புலன்கள் நமது எதிரிகள். ஆனால் மனத்தால் அவற்றை வெற்றி கொள்ள முடியும். அறிவு, மனத்தை நல்வழிப்படுத்தும். ஆனால் அதீத உணர்ச்சிகள் மனம், அறிவு இரண்டையும் வீழ்த்தி விடும். ஆசைகளை அடக்கி ஆள உன்னுள்ளே இயல்பாயிருக்கிற ஆத்ம பலத்தை முழுமையாகப் பிரயோகித்தாலன்றி நிரந்தரமான இப்பகைவனை வெல்ல முடியாது. சுய கட்டுப்பாடே இந்த அரக்கனை வெல்ல வழி.

இந்த ரஜோ குணத்தை இதர மதங்கள் சைத்தான் எனப் பெயரிட்டு அழைத்து இதே அறிவுரையைத்தான் வழங்குகின்றன. அதற்கு இம்மியும் இடந்தரக்கூடாது. பயங்கரமான விரோதியாகப் பாவித்து வெளியிலேயே வைத்திருக்க வேண்டும்.

தோ மண்டல பிரகரம், ரத்னகிரி, ஏப்ரல் 27, 196

# உங்கள் குறைவும் என் நிறைவும்

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

பலவிதமான சாஸ்திரங்களை, மற்ற புஸ்தகங்களைப் பார்க்கிற போது நமக்குப் பலவிதமான அபிப்பிராயங்கள் ஏற்படுகின்றன. அவற்றை மற்றவர்களுக்குச் சொல்கிற போது நமக்கே நல்ல தெளிவு இருந்தால்தான் புரிய வைக்க முடியும். நாம்பாட்டுக்கு எதையோ உபந்நியாஸம் பண்ணிக் கொண்டிராமல், நாம் சொல்லும் அபிப்பிராயங்கள் மற்றவர்களுக்குச் சரியாக ஏறுகிறதா, அவர்கள் அவற்றைச் சரியாக எடுத்துக் கொள்கிறார்களா என்று பார்க்க வேண்டுமானால், அவ்வப்போது உபந்நியாசத்தின் போதே கேள்வி கேட்டுக் கேட்டு இதைத் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. இப்படிக் கேட்கிற போது நமக்கே புதிசு புதிசாகத் தெளிவு பிறக்க இடம் உண்டாகிறது. முதலிலிருந்து நான் சொல்லிக் கொண்டிருக்கிற மாதிரி, பிறத்தியார் புரிந்து கொள்வதும், எடுத்துக் கொள்வதும் பிற்பாடு வருகிற விஷயங்கள்தான். முதலில் நாம் சரியாகப் புரிந்து கொண்டோமா, நமக்கு நம்பிக்கை வந்ததா என்பதே முக்கியம். அதை நாம் அநுஷ்டித்துக் காட்ட முடியுமா என்பதைக் கூடப் பின்னால் பார்த்துக் கொள்ளலாம். நாம் படித்த, கேட்ட அநேக சமாசாரங்களைச் சரியாகத் தெரிந்து கொண்டிருக்கிறோமா என்று முதலில் நிச்சயப்படுத்திக் கொள்ள வேண்டியது அவசியம். எனக்கு இப்படி எத்தனையோ வருஷங்களாக நிறைய அபிப்பிராயங்கள் தோன்றிக் கொண்டேயிருந்தன. அவற்றையெல்லாம் நித்தியம் ஆயிரக்கணக்கான ஜனங்களை வைத்துக் கொண்டு—அதுவும் அநேகமாகப் படித்தவர்களை வைத்துக் கொண்டு — இந்தப் பட்டணத்தில் சொல்லிக் கொண்டிருக்கும்போது, நடு நடுவே எனக்கு, 'நாம் சரியாகப் புரிந்து கொண்டிருக்கிறோமா' என்று தோன்றுகிறது. கூட்டத்தைப் பார்த்துக் கேட்டுக் கேட்டுத் தெளிவு செய்து கொள்ள வசதியாக இருந்தது. அனேக உபந்நியாசங்களில் நான், ''இது இப்படித்தானா? அது அப்படித்தானா?'' என்று கேட்கிறதும், பேச்சு கேட்க வந்திருக்கிற விஷயக்ஞர்கள் அதற்குப் பதில் சொல்வதும்தான் பாதி இருந்திருக்கிறது. நான் சொன்னதைவிடத் தெரிந்து கொண்டது அதிகம். குறிப்பாக, சாதுர்மாஸ்யத்தின் போது, ''ஹிதோபதேசம்'' என்று நான் உபந்நியாசம் தொடர்ச்சியாகச் செய்ததில் நான் பேசியதே குறைச்சல். மற்ற பண்டிதர்கள் தெளிவுபடுத்திச் சொன்னதுதான் ஜாஸ்தி. ஒவ்வொருத்தருக்கு ஒவ்வோர் அபிப்பிராயம் தோன்றுகிறபோது, அவ்வப்போது அவர்கள் வந்து விசாரித்து ஆலோசித்துப் பார்த்து ஒரு முடிவுக்கு வருவதற்கு இம்மாதிரி உபந்நியாசம் என்று கூட்டம் போட்டது ரொம்பவும் உபகாரமாக இருந்திருக்கிறது.

வீடு வாசல் பொறுப்பு இல்லாமல் ஐம்பது வருஷம் ஸ்வாமியாக உட்கார்த்தி வைத்திருந்ததால், ஏராளமாகப் பல துறைகளைப் பற்றியும் அபிப்பிராயங்கள் (Ideas) தோன்றிக் கொண்டேயிருந்திருக்கின்றன. அப்படித் தோன்றியதெல்லாம் சரிதானா என்று அலசிப் பார்க்கிறதுக்கு இந்தப் பேச்சுக் கச்சேரி என்கிற வியாஜம் எனக்கு ரொம்ப சகாயம் செய்திருக்கிறது. முதலில் இம்மாதிரி அலசிக் கொள்வோம் என்ற எண்ணம் எனக்கு இல்லைதான். 'ஏதோ வந்ததுதான் வந்தோம்; எதையாவது நமக்கு நல்லது என்று தோன்றுவதைத்தான் கொஞ்சம் சொல்லிப் பார்க்கலாமே; ஊறுகிற சங்கை ஊதி வைப்போம்; மற்றவர்களைக் காரியத்தில் மாற்றுகிற சக்தி நமக்கு இருக்கிறதோ, இல்லையோ, நல்ல வழிகளைச் சொல்லவாவது ஒரு சந்தர்ப்பம் இருப்பதால், நம்மால் முடிந்தது எதையாவது செய்வோமே' என்றுதான் லெக்சர் பண்ண ஆரம்பித்தேன். முதலில், பெரியவாள் இப்படிப் பிடிவாதம் பிடிக்கிறார்களே என்ற குறை உங்களுக்கு இருக்க வேண்டாமே, போய்த்தான் வைப்போமே என்று வந்தேன். ஏதோ ஒரு பத்து நாள் அதிகம் பேசாமலிருந்துவிட்டு வந்துவிடுவோம் என்றுதான் அப்போது உத்தேசம். 'மெயில் பேப்பரி'ல்கூட பத்து நாள் 'ஸ்டே', பதின்மூன்று நாள் 'ஸ்டே' என்றே போட்டு விட்டார்கள். அத்தனை 'கிராக்கி' பண்ணிக் கொண்டவன்தான், அப்படியும் ஏதோ கொஞ்சம் சொல்லலாமே என்று ஆரம்பிக்கப் போக, அதிலே எனக்கே விஷயங்களை அலசித் தெளிவு பண்ணிக் கொள்ளும்படியான பிரயோஜனம் உண்டாயிற்று. 'ஸ்டே'யும் அதுபாட்டுக்கு நீண்டு ஒன்றரை வருஷம் ஆகிவிட்டது.

வாஸ்தவத்தில் எனக்கு உபந்நியாசம் பண்ணுகிற எண்ணமே ஆதியில் இல்லை. ஆனால் ஜனங்கள் ஓயாமல் தரிசனத்துக்கு வந்து தாங்களாகப் பல விஷயங்கள் சொல்ல ஆரம்பித்தார்கள். இது பெரும்பாலும் வெறும் பேச்சாகத்தான் போயிற்று. இப்படி வெற்றுப் பேச்சாக இருப்பதற்கு, சாஸ்திர விஷயங்கள், மற்ற நம் கலாசார சமாசார விஷயங்களைத்தான் சொல்லலாமே என்று உபந்நியாசம் ஆரம்பித்தேன். இந்த ஊரில் ரசித்துக் கொள்ளக்கூடியவர்களும் நிறைய இருப்பார்கள் என்பதால் ஆரம்பித்தேன். அப்புறம் நமக்கும் தெளிவு ஏற்படுகிறது என்ற ஆசையில் அது வளர்ந்து கொண்டே போயிற்று. இப்போது நான் பட்டணத்துக்கு வருவதற்குமுன் இருந்ததைக் காட்டிலும் பல அபிப்பிராயங்கள் எனக்குத் தெளிவுபட்டிருக்கின்றன. உபந்நியாசத்தின் ஒரு பெரிய பிரயோஜனம் இதுதான்.

(தொடரும்)

**1959ல் சென்னை பிரிவுபசாரத்தில் அருளிய உரை.**




# ஒரு நாளைக்கு ஒரு ரூபாயை
# ஒதுக்கி உங்கள்
# கவலைகளைப் போக்குங்கள்

வெகு சீக்கிர மென்றோ, தாமதமாகி விட்ட தென்றோ எண்ண வேண்டாம். ஒரு நாளைக்கு ஒரு ரூபாய் என்று சிறிய அளவில் கூட நீங்கள் சேமிக்கத் தொடங்க காலம் கடக்கவில்லை. சீக்கிரத்தில் உங்கள் சேமிப்பு உங்களுக்கு பாதுகாப்புடன், மகிழ்ச்சிகரமான நிதியையும் அளிக்கிறது.

சேமிப்பதற்கு யூகோபாங்க் உங்கள் அருகாமையில் உள்ள வசதியான பாங்க்

விவரங்களுக்கு உங்கள் அருகில்
உள்ள யூகோ பாங்க் கிளையை
அணுகவும்



**யுனைடெட் கமர்ஷியல் பாங்க்**

UCOC-52A TAM

தபால்காரர் தீனதயாள் ஹாஸ்டலில் அடி எடுத்து வைத்தது தான் தாமதம், 'குறுகுறு'ப் பெண்கள் அவரைச் சூழ்ந்து கொண்டு, ''எனக்கு கடிதம் இருக்கிறதா, எனக்குக் கடிதம் இருக்கிறதா?' என்று கேட்டுத் துளைத்தெடுத்து விட்டனர். தொந்தரவு தாளாமல் தீனதயாள் கடிந்து கொண்ட பின் தான், அவர்கள் ஓர் ஒழுங்கு முறையில் நின்று கொண்டு, தங்கள் பெயர் கூப்பிடப்படுமா என்று ஆவலுடன் எதிர்பார்க்கலாயினர்

தீனதயாள் தம் கையில் கடிதக்கட்டை எடுத்து வைத்துக் கொண்டு ஒவ்வொரு பெயராக கூப்பிடலானார். கடிதம் வந்த பெண்களின் முகங்களில் மகிழ்ச்சி; வராத பெண்களின் முகங்களில் தளர்ச்சி! கடிதங்களை வழங்கிய பின் தீனதயாள் தமது மூக்குக் கண்ணாடியைச் சரி செய்துகொண்டு, பெண்களின் முகங்களில் படர்ந்த உணர்வுகளைப் படித்துக் கொண்டே ஹாஸ்டல் அலுவலகத்தை நோக்கி நடந்தார்.

ஆனால் சில அடிகள் எடுத்து வைத்தபின் அவர் கால்கள் எழும்ப வில்லை; திரும்பிப் பார்த்தார். தினமும் போலவே அந்த அப்பாவிப் பெண், கும்பலிலிருந்து விலகி எட்டத்தில் நின்று கொண்டு அவரையே பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் முகத்தில் தான் என்ன ஏமாற்றம்! இருந்தாலும் அவள் தனக்குக் கடிதம் உண்டா என்று கேட்கவில்லை.

தீனதயாள் நிற்பதைக் கண்டதும், அப் பெண்ணின் உடலிலே ஒரு நடுக்கம். அவர் பார்வையிலிருந்து விலகி ஓடி விடத் துடித்தன அவளது கால்கள். ஆயினும் தாழ்ந்த கண்கள் அப்படிக் கட்டளை இடவில்லை.

''ரூபா! உனக்கு மட்டும் யாரும் எப்பொழுதும் கடிதம் எழுதுவதில்லையே, ஏன்?'' தீனதயாள் திடுமென்று கேட்கவே அவள் அயர்ந்து போனாள்.

''ஏனோ?'' — கனத்த குரலில் 'ஏனோ, தானோ' என்ற வகையில் அவள் வாயிலிருந்து பதில் வந்தது.

''ஏன்? உனக்கு....?''

''இல்லே, இல்லே, இல்லே!'' என்று வெடித்த ரூபாவுக்கு அங்கு நிற்கப் பிடிக்கவில்லை.

ரூபாவின் கடுஞ் சொற்களைக் கேட்டுப் பெண்கள் அந்தப் பக்கம் பார்த்தார்கள். 'ரூபாவிடம் போய் ஏன் இந்தக் கேள்வியைக் கேட்டோம்?' என்று வருந்தினார் தீனதயாள்.

''தபால்கார ஐயா! இந்தப் பெண்ணுக்கு அப்படி யாராவது இருந்தால் அல்லவா எழுதுவார்கள்!'' என்றாள் ஒரு பெண் அருகில் வந்து, இடக்கரடக்கலாக.

''போயும் போயும் இவளுக்கு ஓர் அம்மா தான் இருக்கிறாள். அவள் நினைவு வந்தால், இவள் போய்ப் பார்த்து விட்டு வந்து விடுவாள்!'' ரூபாவின் வகுப்பு மாணவியும் அறைத் தோழியுமான அஞ்சு உரத்த குரலில் ரூபாவைப் பற்றிச் சுருக்கமான அறிமுகம் தந்தாள்.

அஞ்சுவின் சொற்களில் ஒளிந்திருந்த நக்கல் ரூபாவின் உள்ளத்திலே ஈட்டி முனையாகத் தைத்தது. அவள் உள்ளத்திலே ஒரு புயல் எழுந்தது. அதை எப்படியோ அடக்கிக் கொண்டு அவ்விடத்தை விட்டு அகன்றாள்.

அச் சூழலிலே ஏறி விட்ட கனத்தைக் குறைக்க ஒரு பொல்லாத பெண், ''இந்த உலகத்தில் யாருக்கு யாரும் இல்லையோ, அவர்களுக்குத் தான் தபால்கார தீனதயாள் இருக்கிறாரே!'' என்று வேடிக்கையாகக் கூறினாள். அதைக் கேட்டதும் ஒரு சிரிப்பொலி அதிர்ந்தது.

ஆனால் உள்ளமும் உடலும் புண்பட்டாற் போல ரூபா துடித்துப் போனாள்; பிறர் கண்களில் படாமல் போனால் போதும் என்று அவ்விடத்தை விட்டு மறைந்தாள்.

ஹாஸ்டல் கட்டிடத்தின் பின்புறச் சுற்றுச் சுவரை ஒட்டினாற்போல ஒரு குன்றம். அதைப் பசு மரங்கள் போர்த்திருந்தன. அது மக்கள் நடமாட்டமற்ற பகுதியாகையால், யாருமே அங்கு அதிகமாகப் போவதில்லை. ஆனால் ரூபா மட்டும் மாலை நேரத்து மனச் சுமைகளை இறக்க அடிக்கடி அந்தப் பக்கமாகச் சென்று மதில் சுவர் மீது அமருவதுண்டு. அதுதான் ஹாஸ்டலையும் குன்றத்தையும் பிரிக்கும் எல்லைப் பகுதி. சிறிது தொலைவில் ஓர் அருவி. அதன் சலசலப்பு அமைதியான அந்தச் சூழலுக்கு இலேசான தோர் இனிமையைக் கூட்டியது. மதில்மீது அமர்ந்து மணிக்கணக்கில் ரூபா அருவியின் சலசலப்பொலியில் தன்னை மறந்திருப்பாள்.



அன்றும் அவள் தன் மனச் சுமையைப் போக்கிக் கொள்ள அங்கு சென்று என்றும் போல அமர்ந்தாள். அஞ்சுவின் நக்கல் பேச்சு அவள் மனத்தைக் குடைந்து கொண்டிருந்தது. ரூபா ஓர் ஏழைத் தாயின் எளிய பெண் என்பது அஞ்சுவுக்குத் தெரியும். அவள் அன்னை பல வீடுகளில் எடுபிடி வேலைகள் செய்து தன் வயிற்றுப் பாட்டைக் கவனித்துக் கொண்டு அவளையும் ஆளாக்கி வந்தாள் என்பதும் தெரியும். அவள் கல்லூரியிலிருந்து ஐந்தாறு மைல் தொலைவில் ஒரு சிறிய வீட்டில் வசித்து வந்தாள்.

ஆனால் அஞ்சுவின் தாய் தந்தையரோ நல்ல செல்வந்தர்கள். இருவருடைய சமூக அந்தஸ்தும் வானமும் பூமியும் போன்றிருந்தாலும், விதி அவர்களை ஒரே ஹாஸ்டலில் ஒரே அறையில் அடைத்து விட்டது. அஞ்சு பல முறை அறையை மாற்றிக் கொள்ள முயன்றாள். ஆனால் ஹாஸ்டல் வார்டன் கல்லூரி ஒழுங்குமுறைகளைப் பேணும் பொருட்டு அவளை அதற்கு அனுமதிக்கவில்லை. அந்த ஆத்திரத்தை அஞ்சு ரூபாவின் மேல் கொட்டினாள்.

சில மாணவிகளுக்கு ரூபாவிடம் அனுதாபம் உண்டு. ஆனால் அஞ்சுவுக்கு அஞ்சி அவர்கள் வாய் திறப்பதில்லை. ரூபா தன்மானம் நிறைந்தவள். அஞ்சுவோ அவளது அந்தத் தன்மானத்தை அலட்சியப்படுத்தி வந்தாள். நாளடைவில் அந்த அலட்சியம் வெறுப்பாகவும் மாறியது. அஞ்சுவின் இந்த போக்கை எண்ணும் பொழுதெல்லாம் ரூபாவின் மனம் புழுங்கியது. அந்தப் புழுக்கத்தைக் களைந்தெறிய முயன்றால், அதுவே மலையாக உயர்ந்தது.

ரூபா அழகிலும் அறிவிலும் சிறந்தவள். வகுப்பில் ஒன்று அவள் முதலாவதாக இருப்பாள்; அல்லது இரண்டாவதாக வருவாள். கல்லூரித் தலைவி மதர் ஜெஸ்ஸியும் ஹாஸ்டல் வார்டன் சிஸ்டர் தெரெஸாவும் அவளைப் பெரிதும் மதித்தனர். கிறிஸ்தவ சமயத்தைச் சேர்ந்தவள் என்பதற்காக அவளுக்கு அரைக் கட்டணம், ஹாஸ்டல் செலவில் கூடப் பாதி — இப்படிச் சலுகைகள் வழங்கப்பட்டிருந்தன. இவற்றைத் தவிர உபகாரச் சம்பளம் வேறு. இத்தனை இருந்தும் ரூபாவுக்கு மகிழ்ச்சி இல்லை. அவள் மனத்தை ஒரு தாழ்வு மனப்பான்மை ஆட்கொண்டது. மற்ற மாணவிகளைப் போல் ஆடி பாடிப் மகிழவோ, ஆடம்பர உடை அணிந்து தளுக்கி மினுக்கித் தன் அழகில் மிதக்கவோ அவளால் முடியவில்லை. இந்த உலகில் அவள் தன்னைத் தன்னந் தனியளாக உணர்ந்தாள். அவளுக்கு அந்தரங்கமென்று யாருமே இல்லை.



மிடுக்கும் பகட்டும் நிறைந்த இந்த உலகை எண்ணிப் பார்த்த பொழுது அவன் கண்கள் நனைந்தன. அதைத் தவிர்க்க எதிர்த்தாற் போலிருந்த மரங்களைப் பார்த்தான். மலை வாயிலில் விழும் சூரியனின் கிரணங்கள் இலை களினூடே வடிகட்டி வந்து வலை பின்னின.

கொஞ்சம் கொஞ்சமாகச் சூரியன் மேலைப் பள்ளத்தாக்கில் இறங்கி மறைந்தான். மாலை மயக்கம் மண்ணைக் கவ்வியது. திடீரென்று ரூபா என்ன நினைத்துக் கொண்டாளோ, மதிலைத் தாண்டிக் குதித்தாள். அவள் கால்கள் அடர்ந்த மரங்களைத் தாண்டி ஓடிய ஒற்றைப் பாதையை நோக்கி நடந்தன. அது அருவிக்குப் போகும் பாதை.

பள்ளத்தாக்கில் விழுந்து பாறைகளில் புரளும் அருவியின் ஒலி நெருங்கிக் கேட்டது. உயரத்திலிருந்து விழும் அருவியின் நீர்த் திவிலைகள் அவளது கன்னத்தை முத்தமிட்டன. அவற்றின் தண்மைத் தீண்டலால் அவளது மனக்கொதிப்பு சிறிது அடங்கினாற் போலிருந்தது. மெதுவாக நடந்த அவள் அருவி பூமியை ஆரத் தழுவித் தன்னை மறந்து களிநடம் புரியும் இடத்துக்கு வந்து சேர்ந்தாள். நாற்புறமும் வெள்ளை வெளேர் என்ற பனிப் போர்வை விரித்திருந்தது.

திடீரென்று ரூபா ஒரு கீச்சொலி கேட்டுத் துணுக்குற்றாள். கண நேரத்துக்கு அருவி ஒலியே அந்தக் கீச்சொலியில் அமுந்தி விட்டது. அவள் சட்டென்று ஒரு மரத்தின் மறைவில் ஒளிந்து நின்றாள். பனிமூட்டம் சற்று விலகியபோது, அவள் தன்னெதிரேபாறையின் மீது ஒரு பெண் அமர்ந்திருப்பதைக் கண்டாள். அவள் கண்கள் வியப்பில் நீந்தின.

''அடே! இவள் அஞ்சு அல்லவா!'' ரூபாவின் உதடுகள் முணுமுணுத்தன.

அவளது அறைத் தோழி அஞ்சு எவனோ பாய் ஃபிரண்டின் அரவணைப்பில் மாலை மயக்கத்துக்கே மயக்கம் ஊட்டிக் கொண்டிருந்தாள். விட்டு விட்டு அஞ்சுவின் வாயிலிருந்து கீச்சொலி அடங்கி ஒலித்தது. ரூபா மூச்சைப் பிடித்துக் கொண்டு அந்தக் காதல் நாடகத்தைப் பார்க்கலானாள்.

''விடுங்கள், என்னை!'' அஞ்சு தன் காதலன் மீது பொய்க் கோபத்தை உமிழ்ந்து அவன் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றாள்.

ஆனால் அவன் அவளை விடவில்லை. அவன் முழு பலத்துடன் அஞ்சுவைத் தன் பக்கம் இழுத்தான்; பருந்தைப் போல் அவளைத் தன் கரங்களால் அணைத்தான்.

''ஹௌ மீன்...!'' அஞ்சு சீறினாள்.

''நீ என்ன சொல்கிறாய், அஞ்சு டார்லிங்?'' அவளை அழுத்திப் பிடித்த வண்ணம் அவன் கேட்டான்.

''வாருங்கள், ஹாஸ்டலுக்குத் திரும்புவோம்!''

''இத்தனை சீக்கிரமாகவா?''

''ஆமாம்!''

''ஏன்?''

''உங்களைக் கண்டால் எனக்குப் பயமாயிருக்கிறது!''

''பைத்தியம் போல் பேசாதே! இது போன்ற நல்ல தருணங்கள் வாழ்க்கையில் அடிக்கடி வாய்ப்பதில்லை!''

''வேண்டாம், ரோமியோ! வேண்டாம்!''

''ஏன்? நாம் இருவரும் தான் ஒருவரையொருவர் காதலிக்கிறோமே!''

''காதலித்தாலும் இந்தக் காரியம் மட்டும் என்றால் ஆகாது.''

''அப்படியென்றால் நீ என்னைக் காதலிக்கவில்லை என்றுதான் அர்த்தம்!''

''காதலில் இதெல்லாம் தேவை தானா?''

''எந்தப் பயணத்துக்கும் ஒரு குறிப்பிட்ட கட்டம் உண்டு, அஞ்சு!''

''உண்டென்பது எனக்கும் தெரியும், காதலின் இறுதிக் கட்டம் கல்யாணம்!''

''அது இந்த உலகம் தானாக ஏற்படுத்திக் கொண்ட ஒழுங்கு முறை.''

''அந்த ஒழுங்கு முறையை மீறுவது உசிதம் இல்லை!''

''அஞ்சு! நீ ஓர் அறிவிலி; அடிமுட்டாள்!''

''இருக்கலாம், ஆனால் அந்த முட்டாள் தனத்திலும் ஓர் இன்பம் உண்டு என்பதை அறிவேன்!''

''என் உணர்ச்சிகளுக்குத் தீமூட்டி விட்டு விளையாடுகிறாய்; இன்பம் காண முயல்கிறாய்!''

''ஏனெனில் வாழ்வின் இன்பமே இதில் தான் இருக்கிறது. நெருப்போடு விளையாடினால் எரிந்து போய் விடுவேன்!''

''நான் வெந்து விட்டால் ... ? உனக்குத் துயரம் ஏற்படாதா?''

''ஏற்படாது! எதிரே நீர் அருவி ஓடுகிறது. பாருங்கள்! எரிச்சல் பொறுக்கவில்லையென்றால், அதில் குதித்து விடுங்கள்!''

''அஞ்சு! அப்படியும் அந்தத் தீ தணியவில்லையென்றால்...?''

''ஒரே வழிதான்!''

''என்ன?''

''யாரைப் பார்ப்பதனால் இந்தத் தீ கனிகிறதோ, அவளை உங்கள் பார்வையிலிருந்தே அகற்றி விடுங்கள்!'' என்று கூறியவண்ணம் அஞ்சு அவன் பிடியிலிருந்து திமிறித் தன்னை விடுவித்துக் கொண்டாள்; ஒற்றையடிப் பாதையை நோக்கி ஓடினாள்.

ரோமியோவும் தன் இருக்கையிலிருந்து தாவி எழுந்தான். தேர்ந்த வேடனைப் போல் அஞ்சுவின் மீது பாய்ந்தான். அவனிடமிருந்து தப்ப அஞ்சு சட்டென்று திரும்பினாள். அந்த வேகத்தில் அவள் கால் ஒரு கல்லின் மீது இடிக்கவே, தடுமாறித் தண்ணீரில் போய் விழுந்தாள். வந்த ஆத்திரத்தில் அவனைத் திட்டியும் தீர்த்தாள்.

---



## பாரதி விழா புதுமை - 1

சென்னை பாரதியார் சங்கம் இந்த ஆண்டு நடத்திய கவிதை, பேச்சு, பாட்டுப் போட்டிகளில் முதல் பரிசு பெற்றவர்களைப் பாரதி விழாவின்போது மேடையேறித் தங்கள் ஆற்றலைக் காட்ட அநுமதி அளித்தார் காரியதரிசி திரு பரிதன். ஐந்நூறு மாணவ மாணவியர் போட்டிகளில் கலந்து கொண்டனர் என்பது பெருமிதமளித்தது என்றால் அயலூரிலிருந்தும் பலர் வந்திருந்தனர் என்பது மலைக்கச் செய்தது. பாட்டுப் போட்டியில் முதல் பரிசு பெற்றோரில் ஒருவர் சீர்காழி திரு கோவிந்தராஜனின் மகன். பார்வை இழந்தவர் பள்ளியிலிருந்து வந்து பாடிய சிறுமி முதல் பரிசுடன் ரசிகர்களின் இதயத்தையும் தட்டிக்கொண்டு போய்விட்டாள்!

# அவளது இனிய கனவுகள் நனவாக...

இந்தப் பருவத்தில் அவளது கனவுகள் எதைப்பற்றி இருக்கும்? ஆம், களிப்பு நடம் இடும் கல்யாணம் பற்றி; கைப்பிடிக்கப்போகும் கணவனைப்பற்றி; எதிர்காலத்தில் அவனோடு நடத்தப் போகும் இல்லறம் பற்றியதாகத்தான் இருக்கும் அவை. எல்லாம் இனிமை மிகுந்த நினைவுகள்! ஆனால் வாழ்க்கை கற்பனைப்படி அமைவது இல்லையே! அதில் எவ்வளவோ பிரச்னைகள். பிரதானமானது பணம் பற்றிய பிரச்னையே!

அந்தப் பிரச்னைகளை எல்லாம் தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்க் உங்களுக்குச் சுலபமாகத் தீர்த்து வைக்கும். அதற்காகவே கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களுடன் கூடிய பல டிபாசிட் திட்டங்கள் அதனிடம் உள்ளன. உங்கள் பணப் பாதுகாப்பின் அடிப்படையில் அமைவதுதான் உங்களது எதிர்கால இன்பம்! தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்க் அந்தப் பாதுகாப்பைத் தருகிறது.

- சேவிங்ஸ் டிபாசிட்
- பிக்சட் டிபாசிட்
- ரிகரிங் டிபாசிட்
- தினசரிச் சேமிப்பு டிபாசிட்
- ஓய்வுக் கால டிபாசிட்
- டிபாசிட்டுடன் இணைந்த ஆயுள் இன்சூரன்சு
- முத்துக் குவியல் டிபாசிட்
- கேஷ் சர்டிபிகேட்டுகள்

**தமிழ்நாடு மெர்க்கன்டைல் பேங்க் லிமிடெட்**



(ஷெட்யூல்ட் பேங்க்—ஸ்தாபிதம் 1921)
56, பீச் ரோடு
தூத்துக்குடி-628001

உங்களுக்கு பணிபுரிய
தமிழகமெங்கும் கிளைகள்

EP.TMB.105

உனக்கு ட்ரூ
பிடிக்குமா?

யாருக்குதான்
பிடிக்காது?

ட்ரூ மாரி. எந்நேரமும் சுவைக்குச்
சிறந்த பிஸ்கட்.

தேநீர், காபி அல்லது எந்த
பானத்துடனும் சுவைத்திட
மொறுமொறுப்பான பிஸ்கட்.
உங்கள் குடும்பத்தினருடன்
பகிர்ந்து மகிழ சிறப்பான சுவை.

இந்தியாவில் நவீனமான
தொழிலகத்தில் சுகாதார முறைப்படி
தரமாக தயாரிக்கப்படுபவை.

ட்ரூ பிஸ்கட்டுகள்
மொறுமொறுப்பானவை.
புதுமணம் குன்றாமல்
ருசி மிக்கவை.




# TRUE

# ட்ரூ

## -பகிர்ந்திட விரும்பும் தரமிகுசுவை

HT-AFP-8021

ஆரோபுட் பிரைவேட் லிமிடெட், ஆரோவில் — பாண்டிச்சேரி

AUROFOOD

ரோமியோவோ அவளது நனைந்த உடலைப் பார்த்துச் சிரித்தான். ''நீரருவியின் தன்மையில் உன் உடல் கொதிப்பு அடங்கி விட்டிருக்குமே!'' என்று அவள் வாயைக் கிண்டினான். அதற்கு வகையாக வாங்கியும் கட்டிக் கொண்டான்.

அஞ்சு நீரில் விழுந்து சமாளித்து எழுந்ததும், ரூபா மரத்தின் மறைவிலிருந்து வெளியே வந்தாள். அஞ்சுவின் பார்வை ரூபாவின் மேல் பதிந்ததும், உதவிக்கு ரோமியோவை எதிர்நோக்கி நீண்ட கரங்கள் தாழ்ந்தன. வெட்கிப் போய் அவள் தன் பார்வையையும் தாழ்த்திக் கொண்டாள். ரூபாவை இப்படி எதிர்கொள்ள நேரவே, அஞ்சுவின் உடல் சூடெல்லாம் அடங்கித் தண்ணென்று சில்லிட்டு விட்டது. அவள் எப்படியோ பாறைகளைப் பிடித்துக் கொண்டு நீரிலிருந்து கரையேறி வந்தாள்.

ரோமியோவும் ரூபாவைக் கண்டதும் வெட்கிப் போய் விட்டான். ''பை, பை, அஞ்சு! மீண்டும் சந்திப்போம்!'' என்று கூறி விடைபெற்றான். மனமும் நடையும் தடுமாற நடந்த அவன் அஞ்சுவின் பதிலுக்குக் கூடக் காத்திருக்கவில்லை.

அஞ்சு வெட்கமே உருவமாக நின்றாள். அவளது அறைத் தோழி அவள் ரோமியோவைக் காதலிப்பதை நேருக்கு நேர் கண்டு விட்டாள். யாரை அவள் மட்டமாக நினைத்து வெறுத்து வந்தாளோ, அவளிடமே அவளுக்கு இன்று பயமாக இருந்தது. அஞ்சு முன்னேறித் தன் பர்ஸை எடுத்தாள். அதைத் திறந்து ஒரு சூயிங்கம்மை எடுத்து வாயில் அடக்கிக் கொண்டாள், தன் பதற்றம் வெளியே தெரியாமல் இருப்பதற்காக.

அஞ்சு மௌனமாக நின்றாள். ரூபாவும் மௌனத்தைக் கலைக்க முயலவில்லை. ரூபா வாயைத் திறந்து கேட்டிருந்தால் கூட அஞ்சுவின் பதற்றம் அடங்கியிருக்கும். சொல்லப் போனால் இருவருடைய மூளைகளிலும் கேள்விகள் மலையாகக் குவிந்தன. ஆனால் ரூபா இந்த நிகழ்ச்சிக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்க விரும்பாததுபோல் மௌனமாயிருந்தாள். ரூபா எதுவும் பேசாமல் திரும்பத் தொடங்கவே, அஞ்சுவுக்குப் பொறுக்கவில்லை. ''நில், ரூபா'' என்று கூவியே விட்டாள்.

அஞ்சுவின் ஆணை அவளது கால்களுக்கு விலங்கு பூட்டி நிறுத்தியது. அவள் நின்ற இடத்தில் நின்றபடியே திரும்பிப் பார்த்தாள். ரூபாவை நெருங்கிய அஞ்சு அவளிடமும் ஒரு 'சூயிங்கம்'மை நீட்டினாள்.

''நோ, தாங்ஸ்!'' ரூபா மெதுவான குரலில் அழுத்தமாகச் சொன்னாள்.

''உனக்குச் சூயிங்கம் பிடிக்காதா?''

''பிடிக்கும். ஆனால் சொந்தக் காசு போட்டு வாங்கியதாக இருக்க வேண்டும்!''

ரூபாவின் இந்த வறண்ட பதில் அஞ்சுவின் தன்மானத்தைத் தாக்கியது. அவள் தனக்கு வந்த ஆத்திரத்தில் சூயிங்கம் பொட்டலத்தை நசுக்கினாள். ஆயினும் இக்கட்டான தன் நிலையை நினைந்து பொறுமையைக் கடைப்பிடித்தாள். ரூபா அவளது மன நிலையைப் புரிந்து கொண்டு, தோள்பட்டையை ஒரு குலுக்குக் குலுக்கி விட்டு அங்கிருந்து நடந்தாள். ஆனால் அஞ்சு லபக் கென்று பாய்ந்து அவளை வழி மறித்தாள். ''எங்கே போகிறாய்!'' என்று கேட்டாள்.

''நான் எங்கே போனால் உனக்கு என்ன?''

''ஏதோ இருப்பதனால்தானே கேட்கிறேன்?''

''அது என்னவென்று சொல், அப்புறம் நான் சொல்லுகிறேன்!''

''வார்டன் கேட்டால் என்ன சொல்வாய்?''

''நீயே சொல், என்ன சொல்ல வேண்டும், நான்?''

''நீ நினைத்தால் இந்த விஷயத்தை ரகசியமாகவே வைத்துக் கொள்ளலாம்!'' மூச்சு வாங்கியது அஞ்சுவுக்கு.

''எந்த விஷயத்தை?''

''எனக்கும் ரோமியோவுக்கும் இடையே உள்ள காதலை....''

''பூ! இவ்வளவு தானே?'' ரூபா முறுவலித்தாள்: ''நீ காதலித்தது திருட்டோ புரட்டோ அல்லவே! உன் செய்கை உனக்கே ஏன் உறுத்த வேண்டும்? உன் ரோமியோ உனக்குச் சொந்தம்தானே?''

''அப்படியானால் எனக்கு நீ ஓர் உறுதிமொழி தா. என்னைப் பற்றிப் புகார் செய்வதில்லையென்று!''

''ஓ, ஐ ஸீ!... ஆனால் அஞ்சு, உன்னைப் பற்றி நான் புகார் செய்வேன் என்று நீ ஏன் நினைத்தாய்?''

''நீ ஒரு சாதாரணப் பெண் இல்லை .... உனக்கு யாரும் பாய் ஃப்ரெண்டு கிடையாது. அதனாலே உனக்கு என் காதல் தவறாய்ப் படும். நீ போய் வார்டனிடம் புகார் செய்வாய் என்று நினைத்தேன்!''

ரூபா அஞ்சுவை ஓரக் கண்ணால் பார்த்தாள். அஞ்சுவின் விழிகள் வேண்டுகோள் விடுத்தன. அவள் நிலையை எண்ணி ரூபாவுக்கு ஒரு கணம் அவள் மீது இரக்கம் பிறந்

அடுத்த இதழில்:

நகர்வலம்: இரட்டை நகர் பி.எஸ்.எம்

நவீன முல்லா புதுமைச் சிரிப்புக் கதைகள்

போட்டிக் கதை: பரோபகாரி வைத்தா சிவ. அரிஅரன்



கலைவாணர் ஒருசமயம் காரில் போய்க்கொண்டிருந்தபொழுது ரயில்வே கேட்டை மூடிவிட்டார்கள். கார் நின்றது. "ரயில்வே கேட்டு மூடிவிட்டார்கள்" என்றார் பக்கத்திலிருந்தவர். "பாதகமில்லே. கேட்டுத்தானே மூடினான்?" என்றார் கலைவாணர்.

ரேடியோவில் கேட்டது: வி.எஸ். கிருஷ்ணமூர்த்தி

---

தது. ஆனால் அவள் பேசிய முறை அவளுக்குப் பிடிக்கவில்லை. அதனால் வார்டனிடம் போய் நடந்ததை நடந்தபடியே சொல்லி விட வேண்டும், இந்த ராங்கிக்காரிக்கு நல்ல பாடம் கற்பிக்க வேண்டும் என்று தோன்றியது. ஆனால் அது அவள் வெறுப்புக்குப் பழிவாங்குவதாக அல்லவா முடியும்?

ரூபாவின் மௌனச் சிந்தனை அஞ்சுவை மேலும் குழப்பத்தில் ஆழ்த்தியது. "சொல், ரூபா! புகார் செய்ய மாட்டாயே!" என்று நடுங்கும் குரலில் கேட்டாள்.

இதைக் கேட்டு ரூபாவுக்குக் குபீர் என்று சிரிப்பு வந்தது. சிரிப்பு அடங்ியதும் அஞ்சுவின் தோள் மீது கை போட்டு, "நீ என்னைத் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறாய், அஞ்சு!" என்றாள்.

"எப்படி?"

"உனக்கும் எனக்கும் இன்று எந்தவிதமான வேறுபாடும் இல்லை!"

அஞ்சு ரூபாவைக் கேள்விக் குறியோடு நோக்கினாள். ரூபாவின் உதடுகளில் ஒரு குறுநகை மலர்ந்து மறைந்தது. "நான் இன்று இங்கே ஏன் வந்தேன் என்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்டாள்.

"தெரியாது."

"நான் என் ரோமியோவைக் காண வந்திருந்தேன்."

"உன் ரோமியோவா?"

"ஆமாம்; உன் பாய் ஃபிரண்டை இல்லை; என் பாய் ஃபிரண்டை!"

"நிஜமாகவா?" அஞ்சுவின் கண்கள் பளிச்சிட்டன.

"எங்கு இருக்கிறான் அவன்?"

"உங்கள் இரண்டு பேருடைய காதல் நாடகத்தைப் பார்த்துவிட்டு அவர் போய்விட்டார் போலிருக்கிறது!"

"நீ என்னிடம் முன்னாலேயே ஏன் சொல்லவில்லை?"

"நீ எப்பொழுது கேட்டாய், நான் சொல்வதற்கு? அதோடு என் அறைத் தோழியும் தன் காதல் நாடகத்துக்கு நான் தேர்ந்தெடுத்த இடத்தையே தேர்ந்தெடுத்திருப்பாள் என்று நான் கண்டேனா?"

"இதுதான் தற்செயல் என்கிறது. எனக்கு இந்த அருவி ரொம்பப் பிடிக்கும்!"

"எனக்கும்தான் இந்த அருவியினிடத்தில் ரொம்ப ஆசை!"

"அப்படியானால் காதல் உலகில் நாம் இருவரும் ஒரே மாதிரியாக இருக்கணும் என்று நினைக்கிறேன்!"

"அப்படிச் சொல்ல முடியாது, அஞ்சு! இடத் தேர்வு வேறு விஷயம்; காதல் தேர்வு வேறு விஷயம். என் பிரின்ஸ் உன் ரோமியோவைப் போல் இருக்க மாட்டார். உன் ரோமியோ வெறும் வெறியன். என் அரசகுமாரரோ காதலுக்குக் கோயில் கட்டி வழிபடுபவர்!"

"அழகில்...?"

"...சிறந்தவர்!"

"எங்கே இருக்கிறான்?"

"தெரியாது!"

"முதல் முறையாக நீ அவனை எங்கே சந்தித்தாய்?"

"இங்கே தான், இதே நீரருவிக் கரையில்!"

"எப்போ?"

"இரண்டு நாட்களுக்கு முன்பு!"

"உன்னைப் பார்த்ததும் என்ன சொன்னான் அவன்?"

"நிலவைப் பழிக்கும் முகம் உனக்கு, ரூபா என்றார்!"

"எந்தக் காதலனும் தன் காதலியிடம் இப்படித்தான் சொல்லுவான்!"

"ஆனால் அவர் அப்படி இல்லை."

"அப்படியானால், உன் முகம் நிலவைப் பழிக்கும் முகம் என்று நீ நம்பி விட்டாய்; இல்லையா?"

"ஆமாம். அவர் சொன்ன தோரணை எனக்குப் பொய்யாகத் தோன்றவில்லை."

"ஒரு சந்திப்பில் ரூபாவின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அவனை நான் கட்டாயம் பார்த்தாக வேண்டும்!"

"எல்லோருக்கும் முதலில் நான் உன்னைத் தான் அவருக்கு அறிமுகம் செய்து வைப்பேன்!"

"பிராமிஸ்?"

"எஸ், பிராமிஸ்."

அப்பொழுது எழுந்த மணிச் சப்தத்தைக் கேட்டதும் இருவரும் தன் நிலைக்கு வந்தனர். ஹாஸ்டலில் உணவுக்கு அழைக்கும் மணி அது. ஒவ்வொரு மாணவியும் சரியாக ஏழு மணிக்கு ரோல் காலுக்கு ஹாலில் கூடி விட வேண்டும் என்பது விதிமுறை. அஞ்சு ரூபாவின் கையை தன் கையில் எடுத்து அழுத்தினாள். மீண்டும் அங்கேயே சந்திப்பதாகக் கூறிவிட்டு ஹாஸ்டலை நோக்கி விரைந்தாள். ரூபாவுக்கு அவளது அந்தப் பரபரப்புக்குக் காரணம் தெரியும். ஹாலுக்குள் வருவதற்கு முன் அவள் தனது நனைந்த ஆடையை மாற்றிக்கொண்டு வர வேண்டும் என்பதற்காகவே, அப்படி ஓடினாள்.

அஞ்சு பார்வையிலிருந்து மறைந்ததும், ரூபா தனக்குக் கிடைத்த இந்தச் சாதாரண வெற்றியை நினைந்து முறுவலித்தாள். இன்னதென்று சொல்லத் தெரியாததோர் உணர்வு அவளது உள்ளத்தைக் கிளுகிளுக்க வைத்தது. மெய்யாகவே ஓர் அரகுமாரனைச் சந்தித்து விட்டது போன்ற உணர்வில் மிதந்தாள். தன் நிலை மறந்து அவனோடு நடை பயில்வதாகவும் எண்ணி இறுமாந்தாள். இந்தக் கற்பனையில் அவளது மயிர்க் கால்கள் சிலிர்த்தன. அதைத் தொடர்ந்து அவள் மனத்திரையிலே அஞ்சுவும் ரோமியோவும் காதல் புரிவது போன்ற நிழற்சித்திரம் ஒப்புச ஒவியமெனப் பூரித்தது. அப்பொழுது அவள் மனத்தில் ஓர் எண்ணம் மின்னலிட்டது. அவள் நினைத்தால் இந்தக் கற்பனைக்கு ஓர் உருவம் கொடுக்கலாம்; காதல் வண்ணக் கலவைத் தீட்டி மகிழவும் செய்யலாம்! (தொடரும்)

# வைட்டமின் பற்றாக்குறையினால் ஏற்படும் களைப்பையும் சோர்வையும் எதிர்க்க:



**டாக்டர்கள் சிபாரிசு செய்யும் வைட்டமின்களும் தாதுப்பொருள்களும் ரோஷ் விடாமினெட்ஸ் ஃபோர்டேயில் அடங்கியுள்ளன.**

இன்றைய வாழ்க்கை முன்போல் அல்ல. அவசியமான உணவுபதார்த்தங்களின் விலை ஆகாயத்தை எட்டிப்பிடிக்கின்றது. கிடைக்கும் பொருள்களோ, ஊட்டச்சத்துடனும், தனதளவென்று புதுமையாகவும் இருப்பதில்லை. காலை பலகாரம், மற்றும் மதிய உணவு வெகு அவசரமாகச் சாப்பிடப்படுவதுடன், அவற்றின் ஊட்டச்சக்தியும் முழுமையாக இருப்பதில்லை. அத்துடன், இந்த ஊட்டப்பற்றாக்குறை அலுவலகத்திலும், வீட்டிலும், தொழிற்சாலையிலும் உள்ள வேலை நெருக்கடியினால் ஏற்படும் களைப்பிற்கும், சோர்விற்கும் நம்மை உள்ளாக்குகிறது.

இந்த வைட்டமின் பற்றாக்குறையை எதிர்ப்பதில் முக்கியப் பங்கு வகிக்கிறது ரோஷ் விடாமினெட்ஸ் ஃபோர்டே—சமமான ஆகாரத்திற்கு அத்தியாவசியமான 11 வைட்டமின்கள் மற்றும் 5 தாதுப்பொருள்களின் சாரம்.

தினமும் காலையில் ஒரு ரோஷ் விடாமினெட்ஸ் ஃபோர்டே உட்கொள்ளுங்கள். களைப்பை எதிர்க்க ஒரு கவசம் போன்றது இது.

**ரோஷ்**

# விடாமினெட்ஸ் ஃபோர்டே

"டானிக் மாத்திரை"



ஒரு ரோஷ் விடாமினெட்ஸ் ஃபோர்டே காலைதோறும் உங்களுக்கு 20 பைசாவுக்கும்* குறைவிலே!

* உள்ளூர் வரிகள் தனி

[இம்மாதம் 29ந் தேதியிலிருந்து அக்டோபர் 5ந் தேதி வரை அகில உலக இசை வாரம் கொண்டாட 'யுனெஸ்கோ' ஏற்பாடு செய்துள்ளது. இவ்வாரத்தில் குறிப்பாக அக்டோபர் முதல் தேதியானது சர்வ தேச சங்கீத தினமாகக் கொண்டாடப்படும். இதையொட்டி சர்வ தேச சங்கீதக்குழு கனடாவில் கூடி, மையமான நிகழ்ச்சிகளை நடத்துகிறது. அகில உலக இசை வாரத்தைத் தொடக்கி வைப்பவர் புகழ்கொண்ட வயலின் மாமேதையான யெஹுடி மெநுஹின். சர்வ தேச இசைக் கலைஞர்களின் சகாய நிதிக்காக ஓர் உதவிக் கச்சேரியும் இவர் வழங்குகிறார். அறிவு ரீதியிலும் அநுப ரீதியிலும் ஒப்பற்ற இசைக் கலைஞராக உள்ள மெநுஹின் எல்லா நாட்டு முறைகளிலும் ஞானம் படைத்தவர்; நமது ரவி சங்கரோடு சேர்ந்து ஓர் இசைத்தட்டு பதிவு செய்திருக்கிறார். இக்கலை மாமணி நமது கோரிக்கைக்கு இணங்கி கல்கி நேயர்களுக்கென்று பிரத்யேகமாக அனுப்பி வைத்த புகைப் படத்தை இவ்விதழ் மேலட்டையில் பிரசுரித்துப் பெருமித மடைகிறோம்.]

மக்களுடைய மிக ஆழ்ந்த உணர்ச்சிகளை, அவர்களது மிக உன்னதமான நம்பிக்கைகளை வெளியிடும் சாதனமே சங்கீதம். செப்டெம்பர் 29-லிருந்து அக்டோபர் 5-வரை கொண்டாடப் பெறும் இசைவாரத்தின் போது, குறிப்பாகச் சர்வதேச சங்கீத தினமான அக்டோபர் முதல் தேதியன்று உலகமெங்கணும் பரவியுள்ள மக்கள் தமது ஆழ்ந்த உணர்ச்சிகளையும், உன்னத நம்பிக்கைகளையும் பாட்டில் வெளிப்படுத்துவர். மலர்ச்சிகளும்தான். பரமசத்தியம் ஒன்றையே அதன் எண்ணிலடங்கா, வைரப் பட்டைகள் மூலம் உலகிலுள்ள ஒவ்வொரு இசைப் பாணியும், நாட்டுப் பாடலும், இவற்றை அநுபவிக்கும் ரசிகக் கூட்டமும் வெளிப்படுத்துகின்றன. சாஸ்திரீயம், கிராமியம் இரண்டும் இப்பணியைச் செய்கின்றன. உலக சமுதாயங்களிடை ஒரு பிணைப்புச் சங்கிலியை வேறெவ்விதத்திலும் காண முடியாத இன்று இசைதான் நமக்குக் கைகொடுக்கப் போகிறது.

# இசை பொங்கட்டும்;

இன்றைய சமுதாயத்தில் படிப்பு விருத்தியானதாகக் காணப்பட்டாலும், கல்வியறிவு நாள்தோறும் நலிவதாகவே சொல்ல வேண்டும். கல்வியாகப் பரிணமிக்காத படிப்புலகிலே வெறும் வார்த்தைகள் ஏராளமாக வீசப்படுவதையே பார்க்கிறோம். உண்மைப் படிப்பு வீழ்ந்து வரும் இன்றைய சமூகங்களில் வார்த்தைகள் எவ்வளவு துஷ்ப்பிரயோகமாகலாமோ அவ்வளவுக்கு ஆகி வருகின்றன. இதனால், முன்னெப்போதையும் விட, சமுதாயங்களிடையே உள்ள நீண்ட காலக் காழ்ப்புணர்ச்சிகளை அதிகபட்சமாக வளர்த்து, மனித குலத்தைப் பலவாகப் பிளந்து விட்டிருப்பதையே காண்கிறோம்.

பேச்சு என்பதன் விளைவு இப்படி ஆகி விட்டாலும், இன்றும் பாட்டென்பது, இசை என்பது, பல சமுதாயங்களிடையும் உள்ள பிணக்குகளை அதம பட்சமாகக் குறைத்து அவற்றை மனிதாபிமானத்துடன் பரஸ்பரம் இணைக்கிற சாத்தியக் கூற்றினைத் தன்னகத்தே கொண்டிருக்கிறது.




● ரவிசங்கருடன் - மெநுஹின். இசைத்தட்டின் மேலுறை.

ஒவ்வொரு சமூகத்துடையவும், அதில்-தோன்றும் ஒவ்வொரு பெருங் கலைஞனுடையவும் அங்கமாகி விட்ட நிரந்தரப் பண்புகளையும், அந்த நிரந்தரத்தை நுகர்வதிலேயே தோன்றும் நவீன கோணங்களையும் இன்றைக்கும் இசைக்கலை இழந்து விடவில்லை. பிரிந்து பிரிந்து விழப் பார்க்கும் மானுட இனங்களை ஒன்று சேர்ப்பவை இந்த சாசுவதப் பண்புகளும், அவற்றை உறுதிப்படும் நவ நவ

சாஸ்திரப்படி அமைந்திருந்தாலும் சரி, வேறெப்படியாயினும் சரி ஒவ்வொரு நாட்டிலும், அதன் ஒவ்வொரு பகுதியிலும் இசையானது எத்தனையெத்தனை விதத்தில் வெளியாக முடியுமோ, அப்படி வெளியாவதற்கான வாய்ப்பை ஒவ்வொரு நகரமும் கிராம

# இசைவு தழைக்கட்டும்!

யஹூதி மெனுஹின்

மும் ஏற்படுத்த வேண்டும் என்று வலியுறுத்துகிறேன்.

சரித்திரத்தின் பலவேறு காலங்களில் வழங்கிய சங்கீத பத்ததிகளைப் பரப்ப வேண்டும் — மேடைக்கச்சேரிகள், வானொலி இவற்றின் மூலம். அதுமட்டுமல்ல, இன்றைய உலகில் உண்டான இசை வழிகளையும் இவ்வாறே பிரசாரம் செய்ய வேண்டும். சம்பிரதாயக் கலைஞர் மட்டுமின்றி மற்ற தனிப்பட்ட வித்வான்கள், கோஷ்டி கானக்காரர்கள், ஜாஸ் பாடகர்கள் உட்பட, எவரிடமிருந்து ஓர் இசை தன்னியல்பாகப் பொங்கி வந்தாலும், அப்படிப்பட்ட சங்கீத சிருஷ்டியைப் பரப்ப வேண்டும். மக்களிடையே கலைஞர்கள் தாங்களாக இசையைப் பாடிப் பிரசாரம் செய்ய வேண்டும். இப்பொழுது அமெரிக்காவில் சில இடங்களில் இப்படிப்பட்ட பிரசாரம் நடந்து வருகிறது. உதாரணமாக, ஸான்-ஃபிரான்ஸிஸ்கோவிலும் சத்தம் மிஞ்சிப் போய்விட்ட நியூயார்க்கிலும் கூட, ஜூலியார்ட்-மன்ஹாட்டன் இசைக் கல்லூரிகளில் தேர்வு பெற்ற இளம் கலைஞர்கள், சந்தடிமிகுந்த ராக்ஃபெல்லர் சதுக்கம் போன்ற இடங்களுக்குச் சென்று தாங்களாக இசை வழங்கி வழிப்போக்கர்களை ஈர்த்து இன்புறச் செய்கிறார்கள்! இவர்கள் பணத்துக்குப் பாடவில்லை. ஆனால் பணம் தந்தால் மறுக்க மாட்டார்கள். இந்த வழக்கத்தை உலகில் உள்ள நாடு நகரெங்கும் வளர்த்து சங்கீத மயமாக்க வேண்டும். பழங்காலத்தைத் திரும்பி நோக்கினால் ஹாலந்தில் கையடக்கமான ஆர்கனை வாசித்துக் கொண்டு ஊர் ஊராகத் திரிந்தவர்கள், நேபிள்ஸில் உச்சஸ்தாயியில் இசைத்துக் கொண்டு வீதி வீதியாகச் சென்ற டெனர்கள், பக்தி — வீரம் — சிருங்காரம், இவற்றை வீடு வீடாகப் பாடிச் சென்ற ட்ரூபடோர் கோஷ்டிகள், தமக்கென ஓர் இருக்கையின்றி இசைபாடித் திரிந்து கொண்டிருந்த நாடோடிக் கூட்டங்கள் என்று எவ்வளவு விதங்களைப் பார்க்கிறோம்? இன்றும் இப்படியே சிலர் வாழ்நாள் முழுதும் தாமாகவே உலகைத் தேடிச் சென்று இசையை வழங்கும் மரபுக்குப் புத்துயிர் கொடுத்தால் சாலச் சிறப்பாக இருக்கும். இசைவாரம் இத்திசையில் ஒரு விழிப்பை ஏற்படுத்தட்டும்.

எல்லாவற்றிற்கும் மேலாக இசை வாரம் செய்ய வேண்டியது ஒன்று உண்டு. அது உலக மக்கள் அனைவருக்கும் ஒரு சில கணமாவது பூரண மௌனத்தை வழங்குவதுதான். மௌனத்தில் மேன்மை உண்டு. அதில்தான் சித்தம் ஒருமைப்பட்டுச் சீரிய சிந்தனை உதிக்கும். சத்தத்துக்கு எதிரிடையானது மௌனம் எனில், சங்கீதமும் கூடச் சத்தத்துக்கு — இரைச்சலுக்கு — எதிரிடையானதே. உண்மை இசை அப்படித்தான் இருக்க வேண்டும். அதே சமயத்தில் அது காதுக்கு இன்னாத சத்தங்களை, ஆலைகளிலும் உணவுச் சாலைகளிலும், கடை கண்ணி சந்தைகளிலும் எழும் சத்தங்களை முழுக்கடிக்கவும் பயனாகிறது. சங்கீதத்துக்குச் சாராம்சமானது மௌனமே. எனவே ஒரு குறிப்பிட்ட நேரத்தில் உலகம் முழுவதிலுமே ஒரு சில கணங்கள் பூரண மௌனம் அநுஷ்டிக்கப்பட வேண்டும் என விரும்புகிறேன். சில ஆண்டுகளுக்கு முன் சர்வதேச இசைக்குழு மாநாடு ஒன்றில் பேசிய போலந்து தேசத்தின் பெரும் சாகித்தியகர்த்தரான விதோல்ட் லுடோஸ்லாவ்ஸ்கி, ''மனிதனாகப் பிறந்தவனுக்கு மௌனத்தை ஓர் உரிமையாகப் பெறப் பாத்தியதை உண்டு'' என்று ஓர் தீர்மானமே கொண்டு வந்தார். பெருகி வரும் சத்தத்தால் நமது கேள்விப் புலன் மேன்மேலும் தாக்கி நொறுக்கப்பட்டுச் செயலிழந்து வரும் இன்றைய 'கண்டத்'திலிருந்து தப்ப வேண்டுமாயின், அவர் குறிப்பிட்ட உரிமை மேன்மேலும் அத்தியாவசியமாகி வருகிறது. மேலே சொன்னபடி சில கண மௌனத்தில் உலகம் முழுதும் ஆழ்ந்த பின், ஒவ்வொரு தெரு மூலை முடுக்கிலும், ஆலையிலும், வீட்டிலும், இசையரங்கிலும், சங்கீத நாடகக் கலாசாலைகளிலும் சங்கீதம் பொங்கி வர வேண்டும். இப்படி எண்ணிப் பார்ப்பதிலேயே எனக்கு ஆனந்தம் ஏற்படுகிறது.

சர்வதேச சங்கீத வாரத்தில் சம்பந்தப்பட்ட அனைவரும் இந்த அதிமுக்கியமான நிகழ்ச்சியில் தங்களால் இயன்ற பங்கினைப் பூரணமாக ஆற்ற வேண்டும் எனப் பிரார்த்திக்கிறேன். இது இசைக்கலைஞர்களுக்கு மட்டும் முக்கியம் வாய்ந்த ஒரு நிகழ்ச்சியல்ல — உலகுக்கே முக்கியம் வாய்ந்ததாகும்.

— தமிழாக்கம்: **கன்யா**



● கர்நாடக இசைக் கல்லூரிக்கு பல ஆண்டுகளுக்கு முன்னால் மெனுஹின் விஜயம் செய்தபோது ஸ்ரீமதி எம். எஸ். அவர்களைச் சந்தித்து அளவளாவினார்.

# கைவிட மாட்டாள்



நாங்கள் அந்தச் சிற்றூருக்குக் குடிவந்த மறுநாளே 'ஓநாய் கிலி' எங்களைப் பிடித்து வாட்டத் தொடங்கியது. வேலைக்காரி பாகி வெற்றிலை பாக்கை மென்றவாறே எத்தனை குழந்தைகளைச் சென்ற சில மாதங்களில் ஓநாய் தூக்கிச் சென்றிருக்கிறது என்பதைப் புள்ளி விவரங்களுடன் விளக்கினாள். பக்கத்துத் தெருவில் ஒரு பச்சிளங் குழந்தையை ஓநாய் எங்ஙனம் குதறிப் போட்டது என்பதை அவள் வர்ணிக்கையில் 'எட்கார் அல்லன் போ' தேவலாம் போல் தோன்றியது! மேலே கேட்கப் பிடிக்காத கல்யாணி உள்ளே சென்று விட்டாள். ஆனால் பாகி விட்டால்தானே? தொடர்ந்து சொன்னாள்.

நல்ல வேளை! எங்கள் வீட்டில் சிறு குழந்தைகள் இல்லை. ஓநாய் தூக்கிச் செல்வதாக இருந்தால் நூற்றைம்பது பவுண்டு எடையுடைய என்னையும், சற்று கம்மியான எடையுடைய கல்யாணியையும்தான் தூக்கிச் செல்ல வேண்டும். மனிதர்களே 'கிழம்' என்று எங்களை ஒதுக்கித் தள்ளி இருக்கும் போது ஓநாய் ஏன் எங்களைச் சீந்தப் போகிறது ?

ஆனால் வேலைக்காரி பாகி இன்னொரு குண்டைத் தூக்கிப் போட்டாள்! மழை விடாது பொழியும் நாட்களில் ஓநாய் மலையைவிட்டுக் கீழே இறங்கிவிடுமாம். யார் வீட்டுக் கட்டிலுக்கடியிலாவது பதுங்கியிருந்து, நடு நிசியில் தன் விசுவரூபத்தைக் காட்டுமாம்! படுக்கப் போகும் முன் பத்துத் தடவையாவது 'டார்ச்' விளக்கின் ஒளியைக் கட்டிலுக்கடியில் பாய்ச்சிய பிறகுதான் தூங்கச் சென்றாள் கல்யாணி. எவ்வளவு முன் ஜாக்கிரதையாகப் பார்த்துவிட்டுப் படுத்தாலும் பயம் என்னவோ இருக்கத்தான் செய்தது.

தனியார் நிறுவனத்தில் வேலை முடிந்து நான் வீடு திரும்புகையில் பொழுது சாய்ந்து விடும். தொடர்ந்து நானும் கல்யாணியும் ஒரு 'குட்டி வாக்கிங்' போவோம். கிராம ஜனங்களில் பலர் வயதான எங்களுக்குச் 'சலாம்' வைப்பார்கள். குதிரை மீது செல்பவர்கள், இறங்கி மரியாதை செய்வார்கள். ஒரே மளிகைக் கடையான 'மஜீத் ஸ்டோரில்' தட்டுமுட்டுச் சாமான்கள் ஏதாவது வாங்குவோம். ஓரொரு சமயம் சின்னப் பிள்ளையாட்டம் ஆரஞ்சு மிட்டாய் வாங்கிச் சுவைப்பதும் உண்டு. பக்கத்துக் கட்டடம் பகலில் ஓர் ஆரம்பப் பள்ளி. அந்தி வேளையில் அங்கு ஆடுகள்தான் படுத்திருக்கும். மந்தையோடு மந்தையாக 'ஹுக்கா' பிடித்தபடி வீற்றிருப்பான் கிழட்டு 'வாட்ச்மேன்'. ஊர் எல்லையிலிருந்த வெட்டவெளியில் சற்று நேரம் இளைப்பாறுவோம். சுமை தாங்கி மீது ஓரொரு சமயம் பெரிய கழுகுகள் வீற்றிருக்கும். அருகிலிருந்த 'காக்கும் தெய்வத்'திற்குப் பூசாரி ஏதேதோ படைத்துக் கொண்டிருப்பார். அவர் வீசி எறியும் மிச்சத்தை விழுங்கத் தான் கழுகுகள் காத்திருந்தன போலும்.

கும்மிருட்டில் திரும்பி வருவோம். மின்சார விளக்காவது, ஒன்றாவது! முனிசிபாலிடி லாந்தர்தான் 'மினுக்' 'மினுக்'கென்றுஎரிந்து கொண்டிருக்கும். அதுகூட ஒவ்வொரு நாள் இராது. இருட்டில் பாதைக்குக் குறுக்கே சில சமயம் நாய்கள் ஓடும். 'ஐயோ ஓநாய்' என்று என்னைக் கட்டிக் கொள்வாள் கல்யாணி.

உள்ளூர் 'தர்கா'விலிருந்து இமாம் பிரார்த்தனைக்காக அழைப்பு விட்டுக் கொண்டிருந்தார். அப்பொழுது மணி எட்டு. சப்பாத்தி குருமாவை 'ஒரு கை' பார்த்துக் கொண்டிருந்தோம் நாங்கள். வயதான போதிலும் இந்தத் தீனி ஆசை விடுகிறதா என்ன? முந்திரிப் பருப்பைச் சுவைத்துக் கொண்டிருந்த சமயம் பக்கத்து வீட்டிலிருந்து பேரிரைச்சல் கேட்டது. சாப்பாட்டைப் பாதியில் விட்டுவிட்டு வெளியே வந்தோம்.

அடுத்த வீட்டு ஸ்திரீ 'குய்யோ முறையோ' என்று கத்திக் கொண்டிருந்தாள். அவளைச் சுற்றி ஒரு சிறு கும்பல். எல்லோருடைய கையிலும் கம்பு இருந்தது. ஒரு சிலர் லாந்தரும் வைத்திருந்தார்கள். புரியாத பாஷையில் அனைவரும் சேர்ந்து கத்தவே முதலில் ஒன்றும் விளங்கவில்லை. சற்றுப் பொறுத்து ஹிந்துஸ்தானியில் 'என் பிள்ளையை அந்த நாசமாய்ப் போகிற ஓநாய்தான் கொண்டு போயிருக்கிறது. அவன் சட்டையை என்னமாய்க் கிழித்துப் போட்டிருக்கிறது?' என்று அந்த ஸ்திரீ ஓலமிட்ட போதுதான் குழப்பத்தின் காரணம் விளங்கியது.

பக்கத்து வீட்டுக்காரர்களிடம் அது வரையில் நாங்கள் பேசினதில்லைதான். ஆனால் குழந்தையைப் பார்த்திருக்கிறோம். கறுப்பாக. இனந் தொந்தியுடன் சதா விரலைச் சுவைத்துக் கொண்டிருக்கும் அது. வேலைக்காரி பாகிகூட ஒரு தடவை அங்கலாய்த்தாள். 'பெற்றால் மட்டும் போதுமா? பொறுப்பாகப் பார்த்துக் கொள்ள வேண்டாமா? இன்னையில் தனியே விட்டுவிட்டு வேலைக்குப் போகிறாள். ஒரு நாள் போல் ஒரு நாள் இருக்குமா? ஓநாய் தூக்கிச் சென்றால் என்ன செய்வது? அவளுக்குக் 'காக்கும் தெய்வ'த்தினிடம் அளவற்ற நம்பிக்கை. விபரீதமாக எதுவும் நிகழாதாம்!'

'மஜீத் ஸ்டோரி'லிருந்து 'பெட்ரோமாக்ஸ்' எடுத்து வரப்பட்டது. அதன் ஒளியில் சில காலடிகள் தெரிவதாகச் சொன்னான் ஓர் இளைஞன். அவற்றைத் தொடர்ந்து சென்றவன் குழந்தை போட்டிருந்த சட்டையின் துண்டுகளுடன் திரும்பினான். ஓநாய் குழந்தையைத் தூக்கிச் சென்றிருக்கிறது என்பது சந்தேகமறத் தெரிந்தது. அனைவரும் காலடி தெரிந்த திசையில் நடக்கத் தொடங்கினார்கள். இன்னது செய்வது என்று தெரியாது நின்று கொண்டிருந்த நாங்களும் இலட்சியமின்றி நடக்கத் தொடங்கினோம். தெருக் கோடியில் எங்களுடன் சேர்ந்துகொண்டார் ஒரு மாஜி ஜவான். அவர் கையில் துப்பாக்கியிருந்தது. மிருகங்களை வேட்டையாடுவதில் வல்லவராம் அவர்.

குழந்தையின் தாயார் தலைதெறிக்க முன்னால் ஓடிக் கொண்டிருந்தாள். இப்பொழுது அவள் அழவில்லை. வெட்டவெளியை அடைந்தவுடன் 'காக்கும் தெய்வ'த்தின் கோயிலை நோக்கிப் பறந்தாள் அவள். தொடர்ந்து என்ன நடந்தது என்று பார்த்துத் தெரிந்து கொள்ளுமளவு எங்களுக்குக் கண் பார்வை ஏது? பிரமை பிடித்து நின்று கொண்டிருந்தவர்களை மேலும் குழப்பத்தில் ஆழ்த்தினான் ஓர் இடையன். கம்பளி போர்த்துக் கொண்டிருந்த அவன் ஓநாய் கிராமத்தை நோக்கி ஓடுவதைக் கண்டானும்; எச்சரிப்பதற்காக விரைந்து கொண்டிருந்தானும்.

நடு நிசி. நல்ல மழை. மீண்டும் பக்கத்து வீட்டில் ஒரே அல்லோகல்லோலம். கதவைத் திறந்தவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது! அந்தத் தாயார் குழந்தையைப் பைத்தியக்காரியாட்டம் முத்தமிட்டுக் கொண்டிருந்தாள். 'கல்யாணி! குழந்தை அகப்பட்டு விட்டது' என்று கத்தினேன். அவளும் விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்தாள்.

கூட்டம் இப்பொழுது ஓர் இளம் பெண் மீது பாய்ந்து கொண்டிருந்தது. மாஜி ஜவான் கேட்ட கேள்விக்கு அவள் சரியாகப் பதில் அளிக்காமலிருக்கவும் அவள் கன்னத்தில் அறைந்தான் அவன். கூட்டத்தை விலக்கிக் கொண்டு முன்னே நின்ற நான், ''குழந்தை எப்படிக் கிடைத்தது?'' என்று எனக்குத் தெரிந்த அரைகுறை ஹிந்தியில் வினவினேன்.

''ஸாப்! நான்தான் குழந்தையைத் திருடிச் சென்றேன். ஏன் திருடினேன் என்று எனக்கே தெரியாது. மலடியான என்னைத் தள்ளி வைத்து வேறு கல்யாணம் செய்து கொண்டுவிட்டார் என் புருஷர். அது நடந்து எவ்வளவோ ஆண்டுகள் ஆகிவிட்டன. குழந்தை இல்லையே என்ற ஏக்கம் எனக்கு உண்டுதான். ஆனால் குழந்தையைத் திருட வேண்டும் என்று எனக்குத் தோன்றினதே கிடையாது. நானும்தான் இந்த ஊரில் பல வருடங்களாக வாழ்ந்து வருகிறேனே! இன்று சாயங்காலம் 'காக்கும் தெய்வத்தின்' சந்நிதியை நெருங்குகையில் இந்த விபரீத ஆசை என் மனத்தில் புகுந்து என்னை வதைத்தெடுத்தது. குழந்தையையும் தாயாரையும் எனக்கு நன்கு தெரியும். என்னையும் மீறி ஏதோ ஒரு சக்தி என்னை இந்த வீட்டுக்குத் தள்ளிக் கொண்டு வந்தது. குற்ற உணர்ச்சியுடன் குழந்தையைத் தூக்கினேன். பிறகு ஓடிவிட்டேன்..... ஏன், ஓடிக் கொண்டே இருந்தேன். சற்றுமுன் மீண்டும் என் அகத்தே ஒரு புதிய எண்ணம் தோன்றி என்னைத் திரும்ப வைத்தது. குழந்தையைத் தாயாரிடம் ஒப்படைக்கும்படி யாரோ கட்டளையிட்டது போல் தோன்றியது எனக்கு. உடனே திரும்பிவிட்டேன்'' என்றாள் அந்தப் பெண்.

''கணவன் தள்ளி வைக்கவும் இவள் மூளை புரண்டுவிட்டது. கொஞ்ச நாள் பொரிலி பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்தாள். மீண்டும் 'டிரபிள்' தொடங்கியிருக்கிறது போலும். இல்லாவிட்டால் குழந்தையின் சட்டையையெல்லாம் ஏன் கிழித்துப் போடுகிறாள்? இவ்வளவு குழப்பத்துக்கும் காரணம் அது தானே?'' என்று மாஜி ஜவான் பேசிக்

ஜி.எஸ்.பாலகிருஷ்ணன்



கொண்டிருக்கையில் ஓர் ஆச்சரியம் நிகழ்ந்தது.

காணாமற் போன குழந்தையின் வீட்டுக்குள்ளிருந்து ஓர் ஓநாய் ஓடி வந்தது! அது காட்டை நோக்கிப் பறந்தது. இடையன் சொன்னது உண்மைதான். இங்கே எத்தனை நேரமாக அது ஒளிந்து கொண்டிருக்கிறதோ!

குழந்தையைத் திருடின ஸ்திரீயைப் போலீசில் ஒப்படைப்பதா அல்லது பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்புவதா என்று விவகாரம் பேசினார்கள் கிராமவாசிகள். அவள் மீது எப்படியாவது வஞ்சம் தீர்த்துக் கொண்டால் தான் அவர்கள் மனம் குளிரும் போலும்!

ஆனால் குழந்தையின் தாய் குறுக்கிட்டாள். "அவளை ஒன்றும் செய்யாதீர்கள். 'காக்கும் தெய்வம்' காளியாத்தாதான் அவளை இங்கே அனுப்பிக் குழந்தையைத் திருட வைத்தது. இல்லாவிட்டால் இந்நேரம் அந்த ஓநாய் என்ன செய்திருக்கும் என்று எண்ணவே பயமாக இருக்கிறது. நம்பினவர்களை ஒரு நாளும் கைவிடாது 'காக்கும் தெய்வம்'."

# அன்பு ராணியும், ஆணவ அரசியும்

கவி ஷேக்ஸ்பியர் வாழ்ந்த காலத்தில், பிரிட்டனில் அரசோச்சியவர் முதல் எலிஸபெத் மகாராணி. இவர் காலத்தில்தான் பிரிட்டிஷ் மக்கள் வாழ்வில் பலப் பல முன்னேற்றங்கள் ஏற்பட்டன. எலிஸபெத் ராணி ஒரு சிறந்த ஆண் மகனுக்கு இணையாக, தீரத்தோடும், சமத்காரத்தோடும் நாட்டை ஆண்டார். தாம் திருமணம் செய்து கொண்டால் அரச பதவி எங்கு பறிபோய்விடுமோ என்ற அச்சத்தில் மணம் முடிக்காமலே கன்னியாகவே வாழ்ந்து நாட்டை ஆண்டார்.

அவருக்குப் போட்டியாக இங்கிலாந்தின் சிம்மாதனத்துக்கு உரிமை கொண்டாடக் கூடியவராக, எலிஸபெத்தின் ஒன்று விட்ட சகோதரியான மேரி க்வீன் ஆப் ஸ்காட்ஸ் இருந்தார். இவர் சிறு வயதிலேயே பிரஞ்சு நாட்டு மன்னனை மணம் முடித்து, பிரான்ஸில் இருந்தாலும், இவருக்குரிய ஸ்காட்லாந்து நாட்டை அவர் தாயார் ஆண்டதாலும், எலிஸபெத் ராணி தம் பதவிக்குப் போட்டி வராதென நிம்மதியாக இருந்தார்.

பிரஞ்சு மன்னன் திடீரென்று இறந்து விட்டதால், மன்னனின் தாயார், மருமகள் மேரியைத் தன் நாட்டை விட்டே விரட்டி விட்டாள். இந்தச் சமயத்தில் ஸ்காட்லாந்தில் மேரியின் தாயாரும் இறந்துவிட்டதால் நாடு கடத்தப்பட்ட மேரி ஸ்காட்லாந்து தேசத்துக்குப் பட்டத்து ராணியாக வந்து சேருகிறாள்.

இது எலிஸபெத்துக்குப் பெருங் கவலையாகப் போய்விடுகிறது. மேரி தன் அரச பதவிக்குப் போட்டியாக முளைத்துவிட்டாள் என்று கவலைப்பட்டுப் பலவிதமான சூழ்ச்சித் திட்டங்களை வகுக்கிறாள்.



மேரியோ, எலிஸபெத்தைப் பற்றி மிக உயர்வாக எண்ணி வருபவள். நேசக் கரத்தையே நீட்டுகிறாள். எலிஸபெத் தன் மனத்தில் அரிக்கும் அவநம்பிக்கை காரணமாக நேசக் கரத்தை ஒதுக்குகிறாள். தன் ஆணவத்தை, அதிகாரத்தை நிலைநாட்டுகிறாள்.

பதினாறும் நூற்றாண்டின் முற்பகுதியில் நடைபெற்ற இச்சரித்திரச் சம்பவங்கள் மிக அரிய திரைஓவியமாக (மேரி க்வீன் ஆப் ஸ்காட்ஸ்) புனையப்பட்டிருக்கிறது.

மேரி, அழகும் எளிமையும் மிக்க காதலும் களிப்பும் விரும்புகிற பாத்திரமாக ஒரு சிறிதும் பிசிறின்றி இந்தப் படத்தில் வனையப்பட்டிருக்கிறார்.

இங்கிலாந்து ராணி எலிஸபெத் கம்பீரமும், பிடிவாதமும், ராஜ தந்திர சாகஸங்களும் நிரம்பிய, அரியாசனப் பதவிக்காகக் காதலையும் துறந்துவிடக் கூடிய துணிச்சல் மிக்க அணங்காகப் படைக்கப்பட்டிருக்கிறார்.

மேரி பாத்திரத்தை ஏற்று நடிக்கும் வனிஸ்ஸா ரெட் கிரேவும் எலிஸபெத் பாத்திரத்தை ஏற்று நடிக்கும் கிளெண்டா ஜாக்ஸனும் அவரவர்கள் பாத்திரப் படைப்பைப் புரிந்து கொண்டு நன்றாக நடித்திருக்கிறார்கள் என்று கூறினால் போதாது. படம் பார்ப்பவர்களைத் திறந்த வாய் மூடாமல் பிரமித்துப் போகச் செய்துவிடுகிறார்கள் எனலாம்!

மேரியின் இரண்டாவது கணவனாக நடிக்கும் டிமோதி டால்டன் நடிப்புத் திறமைக்கு இலக்கணம் வகுத்து விட்டார். இளமையும் அழகும் உயர்ந்த பட்டங்களுக்காக ஆசைப்படும் வெறியும் அசட்டுத்தனமும் எல்லாம் கலந்த பாத்திரமாக எப்படித்தான் நடிக்க முடிகிறதோ என்ற வியப்பு ஏற்படுகிறது.

உரையாடல்கள் நறுக்குத் தெறித்தாற் போல் மிகக் குறைந்த வார்த்தைகளில் ஆழ்ந்த கருத்துக்களுடன் அமைந்துள்ளன. காட்சிப் பின்னல்கள் நிமிஷத்துக்கு நிமிஷம் ஆவலை வளர்ப்பதாக இருக்கின்றன.

காட்சிகள் யாவும் சரித்திரச் சம்பவங்கள் நடைபெற்ற இடத்திலேயே சென்று எடுக்கப்பட்டுள்ளதால் — பழைய கோட்டை, கொத்தளங்கள் நம்மைப் பதினாறும் நூற்றாண்டுக்கே கொண்டு சென்றுவிடுகின்றன.

படம் முடிந்து நிகழ் காலத்துக்கு வந்ததும் ஓர் ஏக்கம், மீண்டும் அந்தச் சரித்திர காலத்துக்கே போய்விட மாட்டோமா என்று!

— எஸ். வி. எஸ்.

## இதோ ஒரு சிறந்த முறை—

# புதிய ரம்யா

## உங்கள் குடும்பத்தை சீரியமுறையில் சுத்தமாக்கும் டிடர்ஜன்ட்



பளபளப்பாய், வெண்மையாய் டிடர்ஜன்ட் சோப்பு துணிகளைத் தீவிரமாகச் சுத்தப்படுத்துகிறது — எப்படிச் செய்யவேண்டுமோ அப்படி. இன்னும் சிறப்பாக. பிரமிக்கத்தக்க அளவு சிறப்பாக.

புதிய ரம்யா விஞ்ஞான முறையில் கலவையானது. துணியில் ஆழச் சென்று, அழுந்தப் படிந்த ஒவ்வொரு துளி அழுக்கையும் இழுக்கும் தீவிரம் கொண்டது.



புதிய ரம்யா சர்பேக்டன்ட் (டோடிசில் பென்ஸீன் ஸல் போனேட்) தன் சுத்தமாக்கும் தன்மையால் அழுக்கைத் தாக்குகிறது; அதனை வெளியே இழுக்கிறது.

புதிய ரம்யாவிலுள்ள கார்பாக்ஸி மெதல் செல்லுலோஸ் கரைசலிலுள்ள வெளியேறும் அழுக்கைத் தனிப்படுத்துகிறது — உங்கள் ஆடைகளில் அது மீண்டும் படியாமல் பாதுகாக்கிறது; சுத்தத்திற்கு உத்திரவாதமளிக்கிறது.






அழுக்குத் துணி
வெளுக்க—
பளீரென
ஒளிவீச

அல்ட்ராமரீன் & பிக்மண்ட்ஸ் லிமிடெட், ராணிப்பேட்டை, தமிழ்நாடு

SAA/UPL/1801R TAM

# THERE ARE ONLY TWO KINDS OF WOMEN-

## THOSE WHO READ *femina* AND THOSE WHO DON'T

## WHICH KIND ARE YOU?

**If you are not already one among our 16 lakh readers*, do yourself a favour.....start ordering your copies of Femina today.**

Twice every month, Femina will speak on issues that need to be talked about. We will take you from the metros to the suburbs, from the small towns to the villages, to show you the new Indian woman at work and in the home. We will bring you her ideas on health, politics, the economy, clothes, furniture, films and books—the whole business of living—right up to your doorstep. Maybe you will want to give Femina to your husband, your children, your friends. So that they can understand you better. Don't wait another day !

*BUY YOUR COPY TODAY !!*

*Source : ORG Survey

*femina*

INDIA'S FASTEST GROWING FORTNIGHTLY

## அமெரிக்காவின் அதிர்ஷ்டம்! அண்ணாமலை நகரின் பாக்கியம்!

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் புதிய துணைவேந்தர் டாக்டர் எஸ். சந்திரசேகருக்கும் முன்னாள் ஜனாதிபதி டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணனுக்கும் 'இனிஷியல்' ஒற்றுமை தவிர வேறொரு முக்கியமான ஒற்றுமையும் உண்டு. டாக்டர் ராதாகிருஷ்ணன் காசி சர்வகலாசாலையின் துணைவேந்தராகவும் அதே சமயத்தில் ஆக்ஸ்போர்ட் பல்கலைக் கழகத்தின் பேராசிரியராகவும் பணியாற்றி வந்தார். அவ்வண்ணமே டாக்டர் சந்திரசேகர் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பதவியை வகிக்கும் போது, கூடவே கலிஃபோர்னியா பல்கலைக் கழகத்தின் 'ரீஜெண்ட்' பேராசிரியர் பதவியையும் வகித்து வருவார்.

ராஜமந்திரியில் 22-11-1918-ல் பிறந்த டாக்டர் சந்திரசேகரைப் பதினெரு சிறப்புப் பதவிகள் தேடி வந்த போதிலும், அவற்றுள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் பதவியை அவர் ஏற்றுக் கொள்ள முன் வந்தது அந்தப் பல்கலைக் கழகத்தின் பாக்கியம் என்றே கூற வேண்டும். கனடா, அமெரிக்கா, ஹங்கேரி, இந்தியா ஆகிய பல்வேறு உலக நாடுகளில் 16 கௌரவ டாக்டர் பதவிகள் வழங்கிக் கௌரவிக்கப்பட்டுள்ள டாக்டர் சந்திரசேகர், மக்கள் தொகை இயலில் *(Demography)* உலகப் புகழ்பெற்ற நிபுணர். சிறந்த பொருளாதார வல்லுநர். வேலூர் வூரீஸ் உயர்நிலைப் பள்ளியிலும் வூரீஸ் கல்லூரியிலும் (இன்டர்)பயின்று சென்னை மாநிலக் கல்லூரியில் பொருளாதாரத்தில் பி. ஏ. (ஹானர்ஸ்) முதல் வகுப்பில் தேறிப் பட்டம் பெற்றார். ''பிறகு எம்.லிட். ஓராண்டு படிக்க எனக்கு அப்போது உபகாரச் சம்பளம் ரூ. 120 — ஒரானு ரெவின்யூ ஸ்டாம்பு போக மீதி கிடைத்தது! அடுத்து கொலம்பியா, நியூயார்க் பல்கலைக் கழகங்களில் எம். எஸ்ஸி. (புள்ளிவிவர இயல்) பிஎச்.டி. பட்டங்கள் பெற்று ஓராண்டுக் காலம் பென்சில்வேனியா பல்கலைக் கழகத்தில் ஆசிரியராக பணியாற்றிவிட்டு இந்தியா திரும்பி வந்தேன். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பொருளாதாரத் துறைத் தலைமைப் பேராசிரியராக 1947-ல் பொறுப்பேற்றேன்'' என்கிறார் டாக்டர் சந்திரசேகர்.

''இப்போது அதே பல்கலைக் கழகத்தில் துணைவேந்தராகப் பதவி ஏற்றிருக்கிறீர்கள். கலிஃபோர்னியாவில் பணியாற்றியவாறே இப்பதவியையும் வகிப்பதில் உங்களுக்குச் சிரமம் ஏதும் இராது அல்லவா?'' என்று வினவுகிறேன்.

''கலிஃபோர்னியாவில் ஒரு 'செமஸ்டர்' காலத்துக்கு இருந்து விட்டு டிசம்பர் மாதம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துக்குத் திரும்பி விடுவேன். இரு பதவிகளையும் ஏக காலத்தில் வகிப்பதில் சிரமம் ஏதுமில்லை.''

'' 'ரீஜெண்ட்' பேராசிரியர் என்றால் என்ன, டாக்டர்?''

''வெளிநாடுகளில் உள்ள கல்வி நிறுவனங்களில் ஆசிரியர் பதவி வகிக்கும் இந்தியப் பேராசிரியர்களில் மூன்று வகை உண்டு; ஒன்று, 'விஸிட்டிங் புரொபசர்'. அதாவது அவ்வப்போது சென்று விரிவுரையாற்றுவது. இரண்டாவது, சிறப்பு *(Distinguished)* விஸிட்டிங் புரொபசர். இப்பதவி ஓராண்டு காலம் மட்டுமே. மூன்றாவது, 'ரீஜெண்ட்' பேராசிரியர். இவர் பல்கலைக் கழக 'காபினெட்'டில் பதவி வகிப்பார். அதாவது பல்கலைக் கழக நிர்வாகத்தில் பங்கு பெறும் 'டிரஸ்டி' மாதிரி. உலகிலேயே கலிஃபோர்னியா பல்கலைக் கழகந்தான் மிகப் பெரியதும், நிதி வசதி பெருமளவில் படைத்ததுமாகும். அங்கு பணியாற்றுவோரில் ஏழு பேராசிரியர்கள் நோபல் பரிசு பெற்றவர்கள் என்றால் அதன் பெருமையை நீங்களே ஊகித்துக் கொள்ளலாம்.''

''நம் நாட்டில் பேராசிரியர் பதவி வகிப்போர்க்கும் அங்குள்ள பேரா



சிரியர்கட்கும் ஏதாவது வேறு பாடு உண்டா— அதாவது கல்விப் பணியைப் பொறுத்த மட்டில்?''

''கலிஃபோர்னியா பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் பேராசிரியர்கள் ஒவ்வொருவரும் புதிதாக நூல் எழுதி வெளியிட வேண்டும். கல்வி பயில்விப்பதுடன், புதிய ஆராய்ச்சிகளை இடைவிடாது மேற்கொண்டு ஆராய்ச்சி நூல்களை வெளியிட வேண்டியது அவர்களுக்கு இன்றியமையாத பணியாகும். *(Publish or Perish)* பிரசுரம் செய்; அல்லது நசித்துப் போ! என்ற அறிவிப்புப் பலகையையே அங்கு காணலாம். ஆராய்ச்சி நூலின் கையெழுத்துப் பிரதியைக் கொடுத்தால் 'செக்' கொடுப்பார்கள். ஏதோ, பழங்காலத்தில் தாங்கள் படித்ததை நினைவு படுத்திக் கொண்டு கிளிப்பிள்ளை மாதிரி அதையே திரும்பத் திரும்ப வகுப்புக்களில் வந்து ஒப்பித்து விட்டுப் போகிறது என்பது அங்கே நடக்காது.''

'' அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நீங்கள் துணைவேந்தராகப் பதவி ஏற்றுக்கொண்டு விட்டீர்களா?''

''ஆமாம்; சனிக்கிழமை 6-ம் தேதி சாஸ்திரி ஹாலில் பதவி ஏற்றேன். 450 ஆசிரியர்களும் 2500-க்கு மேற்பட்ட மாணவர்களும் அந்த விழாவினைச் சிறப்பித்தார்கள். மிக அமைதியாக நிறைவேறிய அந்த நிகழ்ச்சியில் ஏதாவது ஒன்றிரண்டு துறைகளில் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் உலகத்துச் சிறந்த பல்கலைக் கழகத்துக்கு இணையாக உயர நான் முழு மூச்சுடன் செயல்படுவேன் என்று அறுதியிட்டுக் கூறினேன். இந்தியப் பல்கலைக் கழகங்களை நவீன முறையில் இயங்கச் செய்ய வேண்டும். நவீன முறை என்றால் 'மேற்கத்திய பாணி'யில் என்பதல்ல என் கருத்து. பல்வேறு கல்வித் துறைகளில் ஏற்பட்டுள்ள முன்னேற்றமே, நான் குறிப்பிடுவது.''

டாக்டர் சந்திரசேகரின் மனைவி திருமதி ஆன். ''இந்த அமெரிக்கப் பெண்ணை 1947-ல் நான் திருமணம் செய்து கொண்டேன். ராதா, பிரேமா, ஷீலா என்ற மூன்று பெண்கள் எங்களுக்கு. கடைசிப் பெண் ஷீலா சென்னையில் பிறந்தவள். 14 வயது. இவள் மட்டுந்தான் இப்போது எங்களுடன் வசிக்கிறாள். கலிஃபோர்னியாவில் படிக்கிறாள். ராதாவின் கணவர் அமெரிக்காவில் பேராசிரியர். பிரேமாவும் அமெரிக்காவில் பயின்று பட்டம் பெற்றவள். ஜினீவாவில் ஐ. நா. நிறுவனத்தில் பணியாற்றுகிறாள்'' என்கிறார், டாக்டர் சந்திரசேகர்.




இவர் பெற்றுள்ள பட்டங்களும், பட்டயங்களும் சிறப்புக்களும் விருதுகளும் கணக்கற்றவை. சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை: குடும்ப நலத் திட்டத்தில் அரிய பணியாற்றியமைக்காக 1964-ம் ஆண்டு கிடைத்த கனடா நாட்டின் காஃப்மன் பரிசு (5000 டாலர்); 1971-ல் மக்கள் தொகைக் கட்டுப்பாட்டு இயக்கத்தில் 'மாபெரும் நிபுணர்' என்ற முறையில் வழங்கப் பெற்ற 'மார்கரெட் சாங்கர்' தங்கப் பட்டயம்.

பாரத அரசில் சுகாதார அமைச்சராகப் பணியாற்றியுள்ள இவரது நெஞ்சில் எப்போதும் நிலையாக இடம் பெற்றுள்ளவை இரண்டு விஷயங்கள்: 1. மக்கட் தொகைப் பெருக்கம் பற்றிய பிரச்னை. 2. இந்தியாவின் படுமோசமான சுகாதார நிலை.

''மேலைநாட்டவர்கள் இங்கு வந்தால் நீர் அருந்தக் கூடப் பயப்படுகிறார்கள். வீதிகள் எவ்வளவு அசுத்தமாக உள்ளன! சுவிட்சர்லாந்து நாட்டில் நடைபாதையில் நின்று கொண்டு ரவாதோசை சாப்பிடலாம். உடல் நலம் கெடாது. இங்கு ஓட்டல்களில் நுழைந்து சாப்பிடவே பயப்படும்படியான நிலை உள்ளது. நம் நாட்டில் உள்ள அற்புதமான கோயில்களும் புராதன வரலாற்றுச் சின்னங்களும் அயல்நாட்டாரின் கவனத்தைக் கவராமல் இல்லை. ஆனால் இங்குள்ள சீர்கேடான சுகாதார நிலை காரணமாக அயல்நாட்டவர் வரப் பயப்படுகின்றனர். கோடிக்கணக்கில் கிடைக்கக் கூடிய அந்நியச் செலாவணி நமக்கு நஷ்டமாகிறது. பிரதமர் இந்திரா காந்தியின் மகத்தான 20 அம்ச திட்டத்தில் 21-வது அம்சமாக நமது நாட்டின் சுகாதார அபிவிருத்தியை சேர்த்துக் கொண்டால் நான் பெருமகிழ்ச்சி அடைவேன்'' என்கிறார் 'அண்ணாமலை'யின் புதிய துணைவேந்தர்.-பேட்டி: **ரா. பாலகிருஷ்ணன்**

---

**தமிழனாய்ப் பிற!**

ஒருநாள் ராஜாஜி ரசிகமணி டி. கே. சி.யை அழைத்துக்கொண்டு போய் காந்திஜிக்கு அறிமுகம் செய்து வைத்தார். ''இவர் கம்பராமாயணத்தில் ஈடு இணையற்ற விரிவுரையாளர்; தமிழில் பெரிய மேதை'' என்று டி. கே. சி.யைப் பற்றி ராஜாஜி கூறினார்.

காந்திஜி: ''அப்படியா? நான் கம்ப ராமாயணத்தைப் பற்றி எவ்வளவோ கேள்விப்பட்டிருக்கிறேன். கம்ப ராமாயணத்தை நான் எவ்வாறு படித்து அநுபவிக்க முடியும் என்பதைக் கூறுவீர்களா?''

இதற்கு டி. கே. சி. என்ன சொல்லியிருப்பார் என்று நினைக்கிறீர்கள்? ''கம்ப ராமாயணத்தை அநுபவிக்க வேண்டும் என்றால் அடுத்த பிறவியில் தாங்கள் தமிழராகப் பிறக்க வேண்டும்!'' என்றார்.

ஆதாரம்: ''தமிழ்நாட்டில் காந்தி'' என்ற நூல். தகவல்: கிருஷ்ணன்.

# புதுமையின் பொலிவுக்கு

# ஹமாம்

நாள்தோறும் ஹமாம் தேய்த்துக் குளியுங்கள். ஹமாம் தரும் நறுமணமுள்ள நுரை உங்கள் சருமத்தை சுத்தம் செய்வதுடன், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது. உங்கள் மேனிக்கு கவர்ச்சியான மெருகையும் ஊட்டுகிறது. நெடுங்காலம்...நீடித்திருக்கும் ஹமாம் டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்.




**அதிக காலம் நீடித்துழைக்கும் டாய்லெட் சோப்**

டாடா
தயாரிப்பு

CMTH-14-152 TAM

வாழ்க்கையில் சுயமாக வளம் பெறும் ஆடவர்...

...அதற்குத் துணை செய்ய அழகான ஆடைகளையும் அணிகிறார்!




நிச்சயமாக, மபத்லால் க்ரூப் அளிப்பவை நேர்த்தியான துணிமணிகள்தான்!

-M.461 TM



**படிப்பதற்கும் பரீட்சை எழுதுவதற்கும் வயதும் வரம்பும் உண்டா, என்ன! ஆர்வமும் உற்சாகமூட்டும் சூழ்நிலையுமிருந்தால் என்னதான் சாதிக்க முடியாது?**

## திறமை மிக்க திலகங்கள்!

# சுஜாதா விஜயராகவன்

ஸ்டேட் பாங்க் சென்னைத் தலைமைக் காரியாலயத்தில் உயர் அதிகாரியாகப் பணியாற்றும் ஸ்ரீமதி சுஜாதா விஜயராகவன், நான் தேனாம்பேட்டை இந்தியன் பாங்குக் கிளையில் ஏஜண்டாக இருந்த நேரத்தில் அங்கு சேமிப்புக் கணக்கு வைத்துக் கொண்டிருந்தார். அப்போதே எனக்கு அவரைத் தெரியும். அவருக்கும் தேனாம்பேட்டைக் கிளையின் மீது ஒரு ஈடுபாடு. ஏனென்றால், வாடிக்கைக்காரர்கள் தாங்கள் காத்திருக்கும் நேரத்தை உணராமலிருக்க நான் நிறையச் சஞ்சிகைகளையும் பத்திரிகைகளையும் வாங்கிப் போட ஏற்பாடு செய்திருந்தேன்!

ஆங்கில இலக்கியத்தில் எம். ஏ. எம்.லிட். பட்டங்கள் பெற்றுள்ள சுஜாதாவுக்குத் தமிழில் கவிதைகள் இயற்றிப் பார்க்க ஆர்வம். பல கவிதைகள் இயற்றியும் இருக்கிறார். நானும் குழந்தைகளுக்காகக் கவிதை எழுதுபவன் என்ற முறையில் இவர் முயற்சியைப் பாராட்ட வேண்டுமல்லவா?

இந்தக் கவிதை முயற்சியில் இவருக்கு ஒரு சுவாரஸ்யமான அனுபவமும் உண்டு.

டில்லியில் இவர் பெற்றோருடன் இருந்தபோது நவராத்திரிக்கு இவரது அழைப்பு, கவிதை உருவத்தில் இருக்கும். ஒரு சந்தர்ப்பத்தில் கப்புடுவின் மனைவிக்கு ஒரு கவிதை அழைப்பு விட்டிருந்தார். அந்த நேரத்தில் கப்புடுவின் மனைவிக்கு உடல் நலம் சரியில்லாததால், கப்புடுவே நேரில் இவர் வீட்டுக்குக் கொலுப் பார்க்க வந்து விட்டார். சும்மா வரவில்லை. சுஜாதாவின் அழைப்புக் கவிதையைப் பாராட்டும் வகையில் தாமே ஒரு பதில் கவிதை எழுதிக் கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் போனார்!

ஆண்டுதோறும் நவராத்திரிக் கொலு அமைப்பில் ஒரு விசேஷ அம்சத்தைப் புகுத்துவார் சுஜாதா. அதில் கிழக்கத்திய மேற்கத்திய பண்பாடுகளை இணைத்துக் காட்டுவார்.

மதுரையில் உள்ள ஒரு மகளிர் கல்லூரியில் படித்து பி. ஏ. பட்டம் பெற்ற இவர், ஆங்கிலப் பாடத்திலும், தமிழ்ப் பாடத்திலும் சமமாகவே முதல் வகுப்பில் வெற்றி பெற்றார். பிறகு டில்லி சர்வ கலாசாலையில் ஆங்கில இலக்கியத்தில் எம். ஏ. பட்டம் பெற்றுத் தொடர்ந்து எம். லிட். பட்டம் பெற ஆராய்ச்சியில் இறங்கினார். இருபதாம் நூற்றாண்டில் அமெரிக்க நாட்டு நாடகக் கலை வளர்ச்சி என்ற பொருள் சம்பந்தமாக டென்னசி வில்லியம்ஸ், ஆர்தர் மில்லர் போன்றவர்களின் நூல்களை அலசிப் படித்துக் கட்டுரை எழுதிப் பட்டத்தையும் பெற்றார்.

ஆரம்ப நாட்களிலிருந்தே இவருக்கு ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் ஒருவித தனி ஈடுபாடு. ஆங்கில இலக்கியத்தில் பிரத்தியேக ருசியை ஏற்படுத்திக் கொண்ட இவர் பிற்காலத்தில் தம்மைப் போல ஒரு பேராசிரியையாக வருவார் என்று இவருடைய கல்லூரி ஆசிரியை எதிர்பார்த்தாரோ என்னவோ! சுஜாதா போட்டிப் பரீட்சை எழுதி, பாங்கு அதிகாரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டார் என்ற செய்தியைக் கேட்டதும் அந்த ஆசிரியைக்குக் கோபமே வந்து விட்டது. "உன்னோடு பேசமாட்டேன் போ!" என்று சொல்லித் தம் ஏமாற்றத்தை வெளிப்படுத்திக்கொண்டார்!

இவர் பாங்கு உத்தியோகத்துக்கான பரீட்சை எழுதும்போது இவர் இரண்டு குழந்தைகளுக்குத் தாய். "படித்துவிட்டுச் சும்மா இருக்கிறாயே. இந்த அப்ளிகேஷனை வேண்டுமானால் போட்டுப் பாரேன்!" என்று சொல்லி



சொல்பவர்: அழ. வள்ளியப்பா

ஒரு நாள் இவர் தந்தை திரு சடகோபன் ஒரு விண்ணப்பத்தாளைக் கொண்டு வந்து கொடுத்தார். பின்னர் நடந்த நேர்முகத் தேர்வில் இவரிடம் கேட்கப்பட்ட கேள்விகள் இலக்கிய சம்பந்தமாகவே இருந்ததால் பதில் சொல்ல உற்சாகமாக இருந்தது. ஆனால் ''பாங்குகள் இயங்கும் விதம் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்?'' என்ற கடைசிக் கேள்விக்குப் பனிச்சென்று ''எனக்கு ஒன்றுமே தெரியாது! ஏதோ ஒரு சேமிப்புக் கணக்கு என் பேரில் இந்தியன் பாங்கில் இருக்கிறது. பணம் வாங்கும்போது 'எங்கே கையெழுத்துப் போட வேண்டும்?' என்று என் கணவரிடம் கேட்டுக் கொள்வேன். அவ்வளவுதான்!'' என்றார், சுஜாதா! அப்படி மனம் திறந்து பேசியதால் தானோ என்னவோ வெற்றி கிட்டியது.

சங்கீதத்திலும் இவருக்கு நல்ல அனுபவமுண்டு. இசை இவருடைய தாய் வழிச் சொத்து. கர்நாடக இசையில் தேர்ந்த ஸ்ரீமதி அனந்தலட்சுமி சடகோபன் இவர் தாயார். சுஜாதா மாறுதலுக்காக மெல்லிசையிலும் பயிற்சி பெற்று 1966ம் ஆண்டு அகில இந்திய ரேடியோ நடத்திய போட்டியில் முதலாவதாக வந்தார். இவருடைய குரல் இப்போதும் சென்னை வானொலி நிலைய தமிழ் மணப் பகுதியில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

நடனக் கலையைத் தொடர்ந்து பயிலாத போனாலும் அதையும் இவர் விட்டுவைக்கவில்லை. அதன் நுணுக்கங்களை நன்கு புரிந்து கொண்டார். இவருடைய நாடகக் கலை லயிப்பு, இசை ஆர்வம், நாட்டிய அனுபவம், எல்லாமாகச் சேர்ந்து இவரை ஒரு நாட்டிய நாடகத்தைத் தயாரிக்கத் தூண்டியது. சமீபத்தில் சென்னை கிருஷ்ணகான சபா அரங்கத்தில், 'பிபரே கிருஷ்ண ரசம்' என்ற நிகழ்ச்சியை வெற்றிகரமாக நடத்திக் காட்டினார்.

இவர் குடும்ப 'பட்ஜெட்' போடக் கற்றுக் கொண்ட கதை சுவாரஸ்யமானது. டில்லியில் இவர் தந்தை வருமான வரித் துறையில் அலுவல் பார்த்துக் கொண்டிருந்தபோது, சுஜாதா தங்கள் வீட்டு ஜன்னல்கள், கதவுகளுக்கான 'கர்ட்டன்' துணிகளை மாற்ற விரும்பினார். தம் ஆசையைத் தகப்பனாரிடமும் வெளியிட்டார்.

தகப்பனார் லேசாகச் சிரித்தார். ''உன் இஷ்டப்படி செய்! ஆனால் ஒரு கண்டிஷன். இந்த மாதத்திலிருந்து நீ நம் வீட்டு வரவு செலவுக் கணக்கை நிர்வகிக்கும் பொறுப்பை எடுத்துக்கொள். உன்னால் பணம் மிச்சப் படுத்த முடியுமானால் தாராளமாகப் புதுத் துணி வாங்கித் தைக்கக் கொடு'' என்று சொல்லிவிட்டார். இதை ஒரு சவாலாக ஏற்றுக்கொண்ட சுஜாதா, தாயாரிடமிருந்து அந்தப் பொறுப்புக்களை ஏற்றுக்கொண்டார்.

குடும்ப பட்ஜெட் என்பது வழுக்கு மரம் மாதிரி. ஒரு மாசம் ஐம்பது ரூபாய் மிச்சப் படுத்தினோம் என்று சந்தோஷப்பட்டால், மறு மாதமே எதிர்பாராமல் இருநூறு ரூபாய் துண்டு விழும் என்பதைப் புரிந்து கொண்டார் சுஜாதா.

சுஜாதாவின் கணவர் விஜயராகவன் ஒரு இஞ்சினீயர். நல்ல ரசிகர். பாடவும் ஆசையுண்டு — தனியாக இருக்கும்போது!

கேட்டு எழுதியவர்: **கோமதி சுவாமிநாதன்**

---

சென்னை கிருஷ்ண கான சபையின் ஆதரவில் பரதநாட்டியம் ஆடிய **குமாரி வசந்தி வேங்கட ராமன்** நாட்டிய கலாலயத்தின் மாணவி. காலஞ்சென்ற தண்டாயுதபாணி பிள்ளையின் சிஷ்யை என்று சொன்னால் போதும். நடனம் உயர்தரமாக இருந்திருக்கும் என்று கண்ணை மூடிக் கொண்டு சொல்லிவிடலாம். ஆனால் கண்ணை இமைக்கவும் விடாமல் ரசிகர்களைக் கவர்ந்தார். அரங்கத்துக்கு ஏற்ற உருவமும் முக அழகும் கொண்ட வசந்தி மேன் மேலும் இந்தக் கலையில் சிறக்க வாழ்த்துகிறோம்.



குமாரி பத்மினி சமீபத்தில் புதுதில்லி சாப்ரு ஹவுஸில் நடனம் ஆடி ரசிகர்களின் பாராட்டுதலைப் பெற்றார். ஸ்ரீமதி யாமினி கிருஷ்ணமூர்த்தியின் மாணவியான இவரது நடன நிகழ்ச்சிக்கு அமைச்சர் திரு பிரும்மானந்த ரெட்டி தலைமை வகித்து வாழ்த்தினார்.



அமரர் கல்கி

### முப்பத்து நான்காம் அத்தியாயம்

## சிவகாமியின் ஓலை

சேனாதிபதி பரஞ்சோதிக்கு சிவகாமி அனுப்பியிருந்த ஓலையில் பின்வருமாறு எழுதியிருந்தது:

''வீர பல்லவ சைனியத்தின் சேனாதிபதியும் என் அன்புக்குரிய சகோதரருமான பரஞ்சோதியாருக்கு ஆயனர் மகள் சிவகாமி எழுதிக் கொண்டது.

''இந்த அபலையை அநாதையை ஒன்பது வருஷ காலம் தாங்களும் பல்லவ குமாரரும் மறந்து விடாமல் நினைவு வைத்துக் கொண்டிருந்து என் சபதத்தை நிறைவேற்றி வைப்பதற்காகப் படையெடுத்து வந்திருப்பதை அறிந்து கொண்டேன். கோட்டைக்கு வடதிசையில் நடந்த பெரும் யுத்தத்தைப் பற்றியும் இங்கே செய்தி வந்திருக்கிறது. அந்த யுத்தத்தில் வாதாபிச் சக்கரவர்த்தி மாண்டிருக்க வேண்டும் என்று இங்குள்ளவர்கள் சொல்லிக் கொள்கிறார்கள்.

''இந்த வாதாபிக் கோட்டையின் காவலரான தளபதி பீமசேனர் என்னை வந்து பார்த்து ஓலை எழுதும்படி கேட்டுக் கொண்டார். அதன்படி என் மனப்பூர்வமான சம்மதத்துடன் இதை எழுதுகிறேன்.

''தாங்களும் பல்லவ குமாரரும் எந்த நோக்கத்துடன் படையெடுத்து வந்தீர்களோ அந்த நோக்கம் நிறைவேறிவிட்டது. சளுக்க சைனியமும் வாதாபிச் சக்கரவர்த்தியும் நாசம் அடைந்தார்கள். இத்துடன் யுத்தத்தை நிறுத்தி வாதாபிக் கோட்டையின் சரணாகதியை ஒப்புக் கொள்ளும்படி ரொம்பவும் வேண்டிக் கொள்ளுகிறேன்.

''நான் அன்று செய்த சபதத்தைப் பல்லவ குமாரர் அதன்படியே நிறைவேற்ற



வேண்டும் என்னும் விருப்பம் இப்போது எனக்கு இல்லை. அதை அப்படியே நிறைவேற்றுவதென்றால், இந்தப் பெரிய நகரத்தின் குற்றமற்ற ஜனங்கள் வீடு வாசல்களை இழந்து சொல்ல முடியாத கஷ்டங்களுக்கு உள்ளாகும்படி நேரிடும். அவர்களை அத்தகைய கொடுமைகளுக்கு உள்ளாக்க நான் பிரியப்படவில்லை. அவ்விதம் செய்தால் யாருக்கு என்ன பிரயோஜனம்?

"ஏற்கனவே நடந்த யுத்தத்தில் இரு தரப்பிலும் ரொம்பவும் உயிர்ச் சேதம் நேர்ந்திருப்பதாகத் தெரிகிறது. என் காரணமாக ஏற்பட்ட இந்த விபரீதப் படுகொலையை நினைத்து ரொம்பவும் வருத்தப்படுகிறேன்.

"அருமைச் சகோதரரே! கடந்த ஒன்பது வருஷ காலம் இந்த நகரத்தில் தன்னந் தனியாக நான் வசித்தபோது ஓயாமல் என் மனம் சிந்தனை செய்து கொண்டிருந்தது. பல்லவ குமாரரும் தாங்களும் முன்னொரு தடவை வந்து என்னை அழைத்த சமயம் நான் உங்களுடன் கிளம்பி வராதது எவ்வளவு பெரும் பிசகு என்பதை உணர்ந்து கொண்டேன். என் சபதத்தை நிறைவேற்றிய பிறகுதான் இந்த நகரைவிட்டுப் புறப்படுவேன் என்று பிடிவாதம் பிடித்தது எவ்வளவு அறிவீனம் என்பதை உணர்ந்து வருந்தினேன். ஆறறிவு படைத்த மனிதர்கள் யுத்தம் என்ற பெயரால் ஒருவரையொருவர் கொன்று கொள்வது எவ்வளவு பைத்தியக்காரச் செயல்?

"கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட ஜீவன்களை மனிதர்கள் கொல்வது தெய்வ சம்மதமாகுமா? ஒரு சிறு அற்பமான உயிரைக்கூட நம்மால் சிருஷ்டிக்க முடியாமல் இருக்கும் போது ஆயிரக் கணக்கான உயிர்களைக் கொல்வது எவ்வளவு பாபமான காரியம்? இதையெல்லாம் நினைத்துப் பார்க்கப் பார்க்க என்னால் இந்தப் பயங்கரமான பெரிய யுத்தம் நேர்ந்துவிட்டதே என்று ரொம்பவும் துக்கப்படுகிறேன்.

"உலகத்தில் மனிதர்கள் குற்றம் செய்தால் அதற்குத் தண்டனையளிக்கவோ அல்லது மன்னித்து அருளவோ எல்லாம் அறிந்த இறைவன் இருக்கிறான். 'அவன் அன்றி இவ்வுலகில் ஓர் அணுவும் அசையாது' என்று பெரியோர் சொல்லுகின்றனர். அப்படியிருக்க, மனிதர்கள் தங்களையொத்த மற்ற மனிதர்களின் குற்றங்களுக்குத் தண்டனை விதிக்க ஏன் முற்பட வேண்டும்?





''சகோதரரே! போனது போகட்டும். இனி மேலாவது இரத்த வெள்ளம் பெருகுவது நிற்கட்டும்.

''என்னுடைய மூடப் பிடிவாதத்தினால் உங்களுக்கெல்லாம் நான் கொடுத்த கஷ்டங்களுக்காக என்னை மன்னித்துவிடுங்கள். பல்லவ குமாரரிடம் நான் ரொம்பவும் கேட்டுக் கொண்டதாகச் சொல்லி யுத்தத்தை நிறுத்தச் செய்யுங்கள்.

''கோட்டை முற்றுகை ஆரம்பமானதிலிருந்து என்னிடம் இந்நகர வாசிகள் ரொம்பவும் மரியாதை காட்டி வருகிறார்கள். பல்லவ் குமாரர் கோட்டைச் சரணாகதியை ஒப்புக் கொண்டால், என்னைப் பல்லக்கிலே ஏற்றிச் சகல மரியாதைகளுடனும் வெளியே அனுப்பி வைக்கச் சித்தமாய் இருக்கிறார்கள். இதையெல்லாம் பல்லவ குமாரரிடம் தெரியப்படுத்துங்கள்.



'' உங்கள் எல்லோரையும் பார்க்க வேண்டும் என்று என் உள்ளம் துடி துடித்துக் கொண்டிருக்கிறது.

''இன்று சூரியன் மலை வாயில் இறங்குவதற்கு முன்னால் தங்களையும் பல்லவ குமாரரையும் தரிசிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்கும் என்று நம்பு கிறேன்.

'' என் அருமைத் தந்தையின் பாத கமலங்களில் என்னுடைய நமஸ்காரங் களைச் சமர்ப்பிக்கிறேன்.''

* * *

மாமல்லருடைய குணப் பண்பையும் மனப் போக்கையும் நன்கு அறிந்துள்ள நாம், சிவகாமி தேவியின் மேற்படி ஓலை அவருக்கு ஏன் அத்தனை கோபத்தையும் ஆத்திரத்தையும் உண்டாக்கியது என் பதை ஒருவாறு ஊகிக்கலாம்.

ஓலையைக் கிழிக்கப் போனவரிடம் சேனாபதி, ''அது என் ஓலை'' என்று சொன்னதும். மாமல்லரின் ஆத்திரம் இன்னும் அதிகமாயிற்று. ''அப்படியா? இதோ உமது ஓலையை எடுத்துக் கொள் ளும், சேனாதிபதி! திவ்யமாக எடுத்துக் கொள்ளும். இந்தத் தர்மோபதேச மகாமந்திர ஓலையை நீரே வைத்துக் கொண்டு பூஜை செய்யும்!'' என்று சொல்லிக்கொண்டே. மாமல்லர் ஓலையை வீசி விட்டெறிந்தார்.

சேனாதிபதி அதைப் பயபக்தியுடனே பொறுக்கி எடுத்துக் கொண்டு கூறி னார் : ''ஆம், பல்லவேந்திரா! இது எனக்கு மகாமந்திரோபதேச ஓலைதான். திருநாவுக்கரசர் பெருமானிடம் சிவ தீட்சை பெறுவதற்காகக் காஞ்சி நகரத் துக்கு வந்தேன். அந்தப் பாக்கியம் அன்று கிடைக்கவில்லை. ஆனால், சிவகாமி தேவியிடம் உபதேசம் பெறும் பாக்கியம் இப்போது கிடைத்தது. நான் ஆசாரிய ராக அடுத்த ஆயனச் சிற்பியாருடைய குமாரி அல்லவா சிவகாமிதேவி.''

மாமல்லருடைய கோபம் இப்போது வரம்புகளை யெல்லாம் கடந்துவிட்டது. சிவகாமி விஷயமாக நாலு பேருக்கு முன்னால் இதுவரை பேசி அறியாதவர், இப்போது அத்தனை பேருக்கும் முன் னால் வெட்டவெளிச்சமாகப் பின்வரும் ஆங்கார வார்த்தைகளைக் கொட்டினார்

'' சேனாதிபதி ! என் வாழ்நாளில் இரண்டு தவறுகளை நான் செய்திருக் கிறேன். சிற்பியின் மகளைச் சிம்மாசனத் தில் ஏற்றி வைக்க முயன்றேன். அந்த முயற்சியில் தோல்வியுற்றேன். தமிழ் ஓதவும் சிற்ப வேலை கற்கவும் வந்த உம்மைப் பல்லவ சாம்ராஜ்யத்தின் சேனாதிபதியாக்கினேன். அதுவும் நான் செய்த பெருந் தவறு ஆயிற்று. சிற்பி யின் மகள் சிம்மாசனத்துக்குத் தகுதி யற்றவள் என்பதை நிரூபித்துவிட்டாள். நாடி பார்க்கும் வைத்தியரின் மகன் நாடு பிடிக்கும் சேனைத் தலைவனாக யோக் கியதை அடைய முடியாது என்பதை நீர் நிரூபித்துவிட்டீர்!....''

சேனாதிபதி பரஞ்சோதிக்குக் கண் களில் நீர் ததும்பிற்று. அவமானமும் ஆத்திரமும் தொண்டையை அடைக்க, தழுதழுத்த குரலில், ''பல்லவேந் திரா.....!'' என்று ஏதோ சொல்வ தற்கு ஆரம்பித்தார்.

'' சேனாதிபதி! நிறுத்தும் !'' என்று மாமல்லர் கர்ஜனை செய்ததும், சேனாதிபதி வாய் அடைத்துப் போய் நின்றார். இது வரை மாமல்லர் அவ ரிடம் இம்மாதிரி பேசியதே இல்லை. மரி யாதைக் குறைவாகவோ மனம் புண் படும்படியோ அவரைப் பார்த்து ஒரு வார்த்தையும் கூறியதே இல்லை. மாமல் லரின் இந்தப் புதிய ருத்ராவதாரம் பரஞ்சோதிக்குப் பிடிபடவே இல்லை.

மாமல்லர் மேலும் சொல்லம்பு களைப் பொழிந்தார் : ''என்னை யார் என்று எண்ணிக் கொண்டீர்? இந்தச் சிற்பி மகள்தான் என்னை யார் என்று எண்ணிக் கொண்டாள் ? என்ன தைரி யத்தினால் இந்த மாதிரி ஓலை எழுத அவள் துணிந்தாள்? நீங்கள் இரண்டு பேரும் பல்லவ குலத்தின் பெருமை யைக் குலைத்துப் பாழாக்க இப்படி எத் தனை காலமாகச் சதி செய்தீர்கள்? இந்த மூடப் பெண் புத்தியில்லாமல் பிடி வாதம் பிடிக்கும்போது இவளுடைய பிடிவாதத்துக்காக நாம் யுத்தத்துக்கு ஆயத்தம் செய்ய வேண்டும்; — இவள் பார்த்து யுத்தம் வேண்டாம் என்றால் உடனே இவளுடைய கட்டளையைச் சிரமேற்கொண்டு யுத்தத்தை நிறுத்தி விட வேண்டுமா ? பல்லவ சாம்ராஜ் யமே இவளுக்காகத்தான் இருக்கிறது என்று எண்ணிக் கொண்டாளா? பல்லவ பிரஜைகளும் பல்லவ சக்கரவர்த்தியும்

# ஓல்ட் ஸ்பைஸ் ஆணழகர் அனுபவிக்கத் தெரிந்தவர்






OS-1/TAM

தரம் நாடி இனம் நாடி ரசிப்பவர்.
உதாரணத்திற்கு அவர் விரும்பும்
ஓல்ட் ஸ்பைஸ் ஷேவிங் க்ரீம்.
செழிப்புள்ள நுரை, சருமத்தின்
ஈரப்பசையைக் காக்கும் சிறப்பு—
இவை அத்தனையோடும்
ஒளிமுகத்தைத் தந்திடும் ஒப்பற்ற
ஷேவுக்குதவ—ஆம் அதற்கெனவே
லாதரிலும் ப்ரஷ்லெஸ்ஸிலும்
கிடைக்கின்றன.

**Old Spice** **ஓல்ட் ஸ்பைஸ்**

**the mark of a man** **ஆண்மையின் சின்னம்**

---

ஆண்களின் அழகுக்காக ஓல்ட் ஸ்பைஸ் அளிக்கும் அணிவரிசை: ஆஃப்டர்-ஷேவ் லோஷன்*, கொலோன்*, பாடி டால்க்*, ஹேர் க்ரீம், பிரிலியண்டைன்.

*எலுமிச்சை மணத்திலும் கிடைக்கின்றன ☐ தயாரிப்பவர்கள்: கோல்ஃபாக்ஸ் லாபரட்டரீஸ் (இந்தியா) பிரைவேட். லிட்., மெனஸீஸ்-ஷல்டன் எண்டர்ப்ரைஸ்.

இவளுக்குத் தொண்டு செய்யும் அடிமைகள் என்று எண்ணிக் கொண்டாளா? இந்தயுத்தம் இவளுக்காகவே ஏற்பட்டது என்று நினைத்துக் கொண்டல்லவா இப்படி ஓலை எழுதத் துணிந்தாள். ஒன்பது வருஷம் பிரயத்தனம் செய்து இந்த மகத்தான சைனியத்துடன் நான் படையெடுத்து வந்தது இந்தச் சலன புத்தியுள்ள சிற்பி மகளின் மூடச் சபதத்தை நிறைவேற்றுவதற்காக அல்ல; இதை நீர் நன்ருய்த் தெரிந்துகொள்ளும். பல்லவ குலத்தின் பங்கமுற்ற கௌரவத்தை நிலைநாட்டுவதற்காகவே நான் வந்தேன். மகேந்திர சக்கரவர்த்தி மரணத் தறுவாயில் எனக்கு இட்ட கட்டளையை நிறைவேற்றும் பொருட்டு படையெடுத்து வந்தேன். பதினெட்டு வயதில் மகாமல்லன் என்று பட்டம் பெற்ற நரசிம்ம பல்லவனைப் பார்த்து நானிலம் சிரிக்காதிருக்கும் பொருட்டு வந்தேன். அற்ப புத்தியுள்ள சிற்பி மகளின் சபதத்தை நிறைவேற்றுவதற்காக வரவில்லை. இவளிடம் தர்மோபதேசம் பெற்று மோட்சம் அடைவதற்காகவும் நான் வரவில்லை. மேலே யுத்தத்தை நடத்துவதற்கு உமக்கு இஷ்டம் இல்லை என்று தெரிகிறபடியால் உமக்கு இந்த க்ஷணமே சேனுதிபதி உத்தியோகத்திலிருந்து விடுதலை தருகிறேன்.''

இவ்வளவு நேரமும் சேனுதிபதியையே பார்த்துப் பேசிய மாமல்லர் சட்டென்று இலங்கை இளவரசரைத் திரும்பிப் பார்த்து, ''மானவன்மரே! நம்முடைய சேனுதிபதி இப்படி நல்ல சமயத்தில் என்னைக் கைவிட்டுவிடுவார் என்று அறிந்துதான் உம்மையும் உடன் அழைத்து வந்தேன். நல்லவேளையாக என் விருப்பத்தின்படி நடக்க நீர் ஒருவராவது இருக்கிறீரே? கோட்டையைத் தாக்குவதற்கு உடனே நீர் ஏற்பாடு செய்யும். இன்றிரவே தாக்குதல் ஆரம்பமாகிவிட வேண்டும்!'' என்ருர்.

**கோ**ட்டை இடி குமுறி இடித்தாற் போன்ற குரலில் மாமல்லர் இவ்விதம் கர்ஜனை செய்து ஓய்ந்ததும் சிறிதுநேரம் அங்கு நிச்சப்தம் குடி கொண்டிருந்தது. அனைவரும் திகைத்துப் போய் நின்ருர்கள். மாமல்லரையும் பரஞ்சோதியையும் இரண்டு உடலும் ஒருயிருமான நண்பர்கள் என்று அவர்கள் அதுகாறும் எண்ணியிருந்தார்கள். பரஞ்சோதியைப் பார்த்து மாமல்லர் இவ்வளவு கடுமையான மொழிகளைக் கூறியது அவர்களைப் பெரும் கலக்கத்துக்கு உள்ளாக்கியது.

மானவன்மரோ, 'இது என்ன பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காக முடிந்ததே! சேனுதிபதியை என்றென்றைக்கும் நமது விரோதியாக்கிக் கொண்டோமே?' என்று எண்ணி வேதனை அடைந்து சும்மா நின்ருர்.

''மானவன்மரே! ஏன் நிற்கிறீர்!'' என்று மாமல்லர் அதட்டவும், மானவன்மர் பரஞ்சோதியைப் பார்த்தார். மற்றவர்களைப் போலவே அத்தனை நேரமும் திகைத்து நின்ற பரஞ்சோதி அப்போது ஓர் அடி முன்னுல் வந்து தழுதழுத்த குரலில், ''பல்லவேந்திரா! பன்னிரண்டு வருஷம் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு நான் செய்திருக்கும் சேவையை முன்னிட்டு ஒரு வரம் அருள வேண்டும்'' என்ருர்.

மாமல்லர் மறுமொழி ஒன்றும் சொல்லாமல் இருக்கவே பரஞ்சோதி மேலும் கூறினுர்: ''பிரபு! தாங்களும் நானும் இதோ தெரியும், இந்த வாதாபி நகரத்துக்குள்ளே நாற்சந்தியில் நிற்கும் புலிகேசியின் ஜயஸ்தம்பத்துக்கருகில் நின்று ஒரு சபதம் எடுத்துக் கொண்டோம். கூடிய சீக்கிரம் படையெடுத்து வந்து அந்தப் பொய் ஜய ஸ்தம்பத்தைப் பெயர்த்துத் தள்ளிவிட்டு அதற்குப் பதிலாகப் பல்லவ விஜயத்தின் ஞாபக ஸ்தம்பத்தை அதே இடத்தில் நிலைநாட்டவும், சிவகாமி தேவியை விடுதலை செய்து கொண்டு போகவும் பிரதிக்ஞை செய்தோம். அதை நிறைவேற்றும் பொருட்டுச் சென்ற ஒன்பது வருஷ காலமாக இரவும் பகலும் நாம் உழைத்து வந்தோம். அந்தப் பிரதிக்ஞை நிறைவேறும் வரையில் இந்தச் சேனுதிபதி பதவியை அடியேன் வகிப்பதற்கு அனுமதி கொடுங்கள்!'' என்ருர்.

மாமல்லரின் முகத்தில் கோபாவேசம் தணிந்து ஓரளவு மகிழ்ச்சியும் மலர்ச்சியும் காணப்பட்டன. ''இதற்கு இவ்வளவு சுற்றி வளைத்து வரம் கேட்பானேன்? சேனுதிபதி! நான் விரும்புவதும் அதுவேதான். உடனே தாக்குதலை ஆரம்பியுங்கள்!'' என்ருர்.

''தயவுசெய்து மன்னிக்க வேண்டும். இன்னும் ஒரு சிறு கோரிக்கை பிரபு! கோட்டையைத் தாக்க ஆரம்பித்துவிட்டால் ஒரு பகல் ஓர் இரவுக்குள் துரிதமாக முடித்து வெற்றிபெற வேண்டும். அதற்குத் தக்க ஆயத்தம் செய்வதற்கு மூன்று நாள் அவகாசம் கொடுங்கள்!'' என்று சேனுதிபதி விநயத்துடன் கேட்டார்.

மாமல்லரின் மௌனம் அவர் வேண்டா வெறுப்பாகச் சேனுதிபதியின் கோரிக்கைக்கு இணங்கியதற்கு அறிகுறியாயிருந்தது. (தொடரும்)

---



மனைவி: ''எனக்கு உப்புமாவும் இட்டிலியும்தான் நன்ருகச் செய்ய வரும்.''

கணவன்: ''கொண்டுவந்து வைத்திருக்கிறயே, இது உப்புமாவா, இட்டிலியா?''

-எம். எஸ்.



ஹோட்டல் சோழனில்
இருவர் தங்கும் அறை

சென்னை கதீட்ரல் சாலையில் ராஜ கம்பீரத்துடன் உயர்ந்து நிற்கும் ஹோட்டல் 'சோழ'னை மூன்று கோடி செலவில் நிர்மாணித்திருக்கிறது ஐ. டி. ஸி. ஆக்ராவில் 'மொகல்'லும் புது தில்லியில் 'மௌரியா'வும் வெகு விரைவில் உருவாகவிருக்கும் ஹோட்டல்கள். நவீன வசதிகள் அனைத்தும் படைத்த 'சோழ'னில் தனி விசேஷம் 'ஐஸ் ஸ்கேட்டிங்'. இக்கலையைக் கற்றுக் கொள்பவர்களுக்குப் பயிற்சி அளிக்கவும் போகிறார்கள். கல்கத்தாவிலிருந்து 'ஐஸ் ஸ்கேட்டிங்' கலையில் தேர்ந்தவர்கள் பதினொரு பேர் வந்து பல சாகஸச் செயல்களைச் செய்து காட்டி மகிழ்விக்கிறார்கள். சோழன் நிர்மாணித்து முடியும் தறுவாயிலிருக்கும் போதே நவம்பர், டிசம்பர், ஜனவரி மாதங்களுக்கு 'ஹவுஸ் புல்' புக்கிங் ஆகிவிட்டது என்கிறார் ஐ. டி. ஸி. சேர்மன் ஹக்ஸர். இரண்டு படுக்கைகள் கொண்ட அறைக்கு வாடகை 180 ரூபாய். ஆம்! ஒரு நாளைக்குத்தான்! சர்வதேச சுற்றுலாப் பயணிகளைச் சகல வசதிகளுடன் வரவேற்கக் காத்திருக்கிறான் இந்தச் சோழன். யுகோஸ்லாவியாவும் ஸ்பெயினும் சுற்றுலாப் பயணிகளைக் கற்பக விருட்சமாகப் பாவித்து அன்னியச் செலாவணியை ஏகமாகச் சம்பாதிக்கும் நாடுகள். அந்நிலையை விரைவில் இந்தியாவும் எட்டட்டும்!

- பி. எஸ். எம்.

## ஹிந்தி பெறும் வரவேற்பு

ஹிந்தி ஆதரவாளர்களின் பிடிவாதத்துக்கு இணங்கி, 1973வது ஆண்டில் பம்பாய் டெலிபோன் நிர்வாகத்தினர் டெலிபோன் டைரெக்டரியின் 12000 பிரதிகளை ஹிந்தி மொழியில் அச்சடித்தார்கள். மூன்று பிரதிகளை ஒரு வியாபார ஸ்தாபனம் வாங்கியது. மேலும் ஐம்பது பிரதிகள் விலை போயின. பாக்கிப் பிரதிகள் முடங்கிக் கிடந்தன.

ஒரு நாள் திடீரென்று ஹிந்திப் பதிப்பின் ஆறாயிரம் பிரதிகள் கேட்டு உள்ளூர் வியாபாரி ஒருவரின் கடிதம் கிடைத்ததும் டெலிபோன் அதிகாரிகள் முதலில் பரவசமடைந்தனர். அடுத்த கணம் ஒருவரே 6000 பிரதிகளை எடுத்துக்கொள்ள முன்வருவானேன் என்ற ஐயம் எழுந்தது.

விசாரித்ததில் ரகசியம் புலனாயிற்று. இரண்டரைக் கிலோ எடையுள்ள ஹிந்தி டைரக்டரியின் பிரசுர விலை நான்கு ரூபாய். ஆனால் அதையே பழைய பேப்பராக விற்பனை செய்யும்போது அதன் மதிப்பு ஆறு ரூபாயிலிருந்து எட்டு ரூபாய் வரை உயர்ந்திருந்தது!

டெலிபோன் நிர்வாகத்தினர் அதன் விலையை உடனேயே பன்னிரண்டு ரூபாயாக ஏற்றி அந்த வியாபாரி மறுபடியும் கிட்ட அணுகாமல் செய்தனர். சில தினங்களுக்குப் பிறகு விற்பனையாகாது முடங்கிக் கிடந்த அத்தனை பிரதிகளையும் அவர்களே பழைய பேப்பராகத் தள்ளிவிட்டனர்!

இந்த லட்சணத்தில் இருக்கிறது ஹிந்தி மொழிக்குவரவேற்பு!

ஆதாரம்: ஃப்ரீ பிரஸ் ஜர்னல் — தகவல்: டி. வி. கிருஷ்ணன்

## உலகைக் கவரும் வரவேற்பு

கல்கத்தாவில் உலக டென்னிஸ் மன்னர்களை வரவழைத்து 50,000 டாலர் வெகுமதியோடு மூன்றாவது கிராண்ட் ப்ரீ போட்டியை நிகழ்த்தவிருக்கிறார்கள். நேதாஜி சுபாஷ் இண்டோர் ஸ்டேடியத்தில் இந்த உலக டென்னிஸ் பந்தயம் நடைபெற விருக்கிறது. பன்னிரண்டாயிரம் பேர் அமர்ந்து பார்க்கும் இந்த இண்டோர் ஸ்டேடியம் குளிர் பதனம் செய்யப்பட்டுள்ளது. மற்றொரு தனி விசேஷம், மர டென்னிஸ் கோர்ட்டின் மீது ஃபைபர் கண்ணாடி தரை (Fibre glass) நிர்மாணம். அமெரிக்காவில் மிகப் பிரபலமாகியுள்ள இந்த ஃபைபர் கண்ணாடித் தரையை ஆட்ட முடிவுக்குப் பிறகு பாயைப் போல் சுருட்டி வைத்துவிடலாம்! ஒன்றேகால் லட்சம் விலை மதிப்புள்ள இந்த ஃபைபர் கண்ணாடித் தரை அகில உலக டென்னிஸ் வீரர்களின் விளையாட்டைச் சோபிக்க வைக்கும் என்கிறார் இந்த கிராண்ட் ப்ரீ டென்னிஸ் பந்தய நிர்வாகிகளில் முக்கியமானவரான சந்தனு ரே. அகில உலக டென்னிஸ் விளையாட்டு வீரர்களை இலவசமாக விமானங்களில் அழைத்து வருவதோடு அவர்களுக்கு இலவச இட வசதி, உணவு வசதிகளும் உண்டாம். இந்தப் போட்டிக்கு ஆகும் செலவு பதினைந்து லட்சம்!

-குண்டுமணி



# படித்தோம்

## ஒரு பாரத புத்திரன்

சிறு கதை எழுதுவதில் ஒரு புது வழியைக் கையாண்டு உலகப் புகழ் பெற்ற அமெரிக்க ஆசிரியர் ஓ'ஹென்றி. அவர் தமது — சுமார் பன்னிரண்டு கதைகள் உள்ள தொகுதிக்கு — 'நாற்பது லட்சம்' என்று பெயர் வைத்தார். இப்படிப் பெயர் வைத்தற்குக் காரணத்தையும் அப்புத்தகத்தில் நகைச்சுவையுடன் விளக்கினார்.

'' இந்த நியூயார்க் நகரில் மதிக்கத் தகுந்த மனிதர்கள் எத்தனை பேர்கள் இருப்பார்கள் என்று கணக்கிட்டால் நானூறு பேர்கள் தேறுவார்கள் என்று ஒருவன் சொன்னான். அவனை



ஜெகசிற்பியன்

விட அறிவுடைய வேறொருவன் 'நாற்பது லட்சம் பேர் இருக்கிறார்கள் என்றான். இப்படிச் சொன்னவர் ஜனத் தொகையைக் கணக்கிடும் அதிகாரி!''

திரு ஜெகசிற்பியன் அமெரிக்க சிறுகதை மன்னர் ஓ'ஹென்றி குறிப்பிட்ட இவ்வுண்மையை நன்கு உணர்ந்து எல்லாத் தரத்து மக்களையும் மதித்து எழுதுபவர். ஓ'ஹென்றி பாணி இவருக்கு வராது. ஆனால் ஓ'ஹென்றியின் மனிதாபிமானத்தைப் புரிந்து கொண்டிருக்கிறார்.

'' ஒரு பாரத புத்திரன்'' என்ற அவருடைய கதை தொழிற்சங்கத் தலைவர்களிடம் இன்றைய பாட்டாளி சிக்கிக் கொண்டு படும் பாட்டை அப்படியே சித்திரிக்கிறது நெஞ்சை உருக்கும் கதை.

'' ஜோசியம் பலித்தது'' என்ற கதையில் தெருவோரத்தில் அமர்ந்து 'கிளி ஜோஸ்யம்' கூறும் பட்சி ஜோஸ்யக்காரனின் அவல நிலையைத் தமக்கே உரிய நடையில் படம் பிடித்துக் காட்டுகிறார்.

''ஒரு பாலத்தைக் கடந்து'' என்னும் கதை, மாதவன் என்ற யோக்கியமான விவசாயி இளைஞனின் மனம் தவறான வழிக்குத் தட்டுத் தடுமாறிச் செல்ல முயல்வதைச் சித்திரிக்கிறது. சொற்களைக் கோத்து ஆசிரியர் உணர்ச்சிச் சரமாக்கிக் காட்டும் சாகசத்தை வியக்காமல் இருக்க முடியவில்லை.

கதையை வார்க்கும் போதே இன்றைய சமுதாயத்தில் காணக்கூடிய சிற்சில நிலைகளை மிக அநாயாசமாகச் சாடுகையில் நல்ல சங்கீதத்தினிடை நல்ல சங்கதி விழுந்தால் எப்படி மெய்சிலிர்க்குமோ, அப்படிப் புல்லரிக்கிறது. உதாரணத்துக்கு இப்பகுதியைப் படியுங்கள்.

''பாரதின்னு ஒரு கவிஞன் இருந்தான், அவன் பாடின பாட்டுக்களாலே நமக்குச் சுதந்திரம் கிடைச்சது. பாரதிதாசன்னு ஒரு கவி இருந்தான். அவனோட கவிதைகளாலே நமக்குப் புத்தியும் சக்தியும் வந்தது. இப்ப சில மகாகவிகள் கவனப்படுத்துகிற பாட்டுக்களாலே நமக்குப் புதுசா ஒரு நடனக் கலை வகையே கிடைச்சிருக்குது. அது என்னன்னு கேட்கிறயா ? ரெக்கார்ட் டான்ஸ் !''

— எஸ்.வி.எஸ்.

பிரசுரம்: வானதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை 600017; விலை: ரூ. 6—50.



குருநானக்

## குருநானக்

சீக்கிய மத ஸ்தாபகரான குருநானக்கின் வாழ்க்கையைப் பல நூல்களின் ஆதாரத்தைக் கொண்டு, ஆராய்ந்து ஹர்பன்ஸ் சிங் சிறப்பாக இந்த நூலை இயற்றியிருக்கிறார். இஸ்லாம் — ஹிந்து என்ற மத வேறுபாடின்றி 'எம்மதமும் சம்மதம்; ஆனால் அது மக்களின் வாழ்வுக்கு வழி காட்டுவதாக அமைய வேண்டும்' என்ற கொள்கையில் ஊறி குருநானக் அவர்கள் வாழ்ந்து காட்டியுள்ளார்கள். அவரது வாழ்க்கையில் நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளையும் ஸாக்கிகள் எப்படிக் கூறுகின்றன என்பதை ஆராய்ந்து, அத்தாட்சிபூர்வமாக எழுதியுள்ளார்.

அவரது உபதேச மொழிகளும் ஆங்காங்கே இடம் பெற்று நூலுக்குப் பெருமை கூட்டுகின்றன.

பஞ்சாபிப் பல்கலைக் கழகம் குருநானக்கின் ஐந்நூறும் பிறந்த நாளை முன்னிட்டு, இந்த நூலை வெளியிட்டது மதுரை பல்கலைக் கழகம் ஸ்ரீ சிவ. இராமச்சந்திரனைக் கொண்டு இதனைத் தமிழில் மொழிபெயர்த்து இலக்கியப் பரிவர்த்தனை மட்டும் அன்றி சமய

அறிவுத் துறைக்கும் ஆக்கப் பணி புரிந்திருக்கிறது. நேர்த்தியான தமிழ் பெயர்ப்பு பாராட்டுதற்குரியது. செய்யுள் வடிவம் பெற்ற நானக்கின் பாடல்களில் ஒன்று அன்றைய நிலைமையை மட்டுமென்ன, இன்றைய நிலைமையையுமே படம் பிடித்துக் காட்டுகிறது.

மூடர்கள் அறிஞராய் மதிப்புறுகின்றார்,
குதர்க்கம் பகுத்தறிவாகவே கொள்ளப்
படும்,
எவருமே பணமது ஒன்றையே நாடுவர்,
நற்செயல்புரிவோடு விடுதலைதன்னையே
விழைந்திடுவதனால் மதிப்பிழக்கின்றனர்
. . . . . . . . . . .
பணிவும் மானமும் எங்கணும் இல்லை,
நானக் ! பொய்ம்மையே எங்கணும்
விளங்கிடும்

—ரா.வீ.

பிரகரம்: மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை; விலை: குறிப்பிடவில்லை.

# சொல்கிறோம்

நாடகங்கள் நடிப்பதற்கு மட்டுமல்ல; சுவைத்துப் படிக்கவும் ஏற்றவை என்பதை மெய்ப்பிக்கத் தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கத்தார் நூல் வடிவாக்கித் தந்துள்ளனர். சிறுகதைகளால் மிகப் பிரபலமடைந்த திரு அழகிரிசாமி நாடகங்கள் வடிப்பதிலும் வல்லுநர் என்பதை நூல் வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது. —பி.எஸ்.எம்.

பிரகரம்: தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம் லிமிடெட், 8, சென்ன ரெட்டித் தெரு, சென்னை – 8 விலை. ரூ. 5



கு. அழகிரிசாமி



ஆண்டர்சன்

## வஞ்ச மகள்

கோதாவரி நதி தீரத்தில் பஞ்சவடியில் உள்ள பர்ணசாலை. மரவுரி தரித்த ராமனின் பேரழகோடு குவளை மலர் அழகையும் சேர்த்து ரசிக்கிறாள் சீதை. இவர்களது நிம்மதியைக் குலைக்க வருகிறாள் வஞ்ச மகள் சூர்ப்பனகை. அவளது ஆசை நாடகம் ராமனை வசப்படுத்த முயல்கிறது. அதன் பலன் லக்ஷ்மணனது கொடிய சீற்றத்துக்குச் சூர்ப்பனகை ஆளாகி மூக்கறுபடுகிறாள்! இந்த நிகழ்ச்சிகளை நாடக வடிவில் கம்பரது சொற்களிலேயே வடித்துத் தந்திருக்கிறார் கு. அழகிரிசாமி.

'வஞ்ச மகள்' என்னும் இந்நாடகத் தொகுதியிலே, போர்ச்சுகீசிய நாட்டிலிருந்து வாஸ்கோடகாமா இந்திய மண்ணில் அடியெடுத்து வைக்கும் சரித்திர நிகழ்ச்சியை 'பரங்கியர் வந்தார்' நாடகம் சித்திரிக்கிறது. பாரதியாரின் ஞான ரதம் மூன்றாவது நாடகமாக இடம் பெற்றிருக்கிறது. நான்காவது "ஜன்மப் பகை" சரித்திர நாடகம். இந் நாடகம் அமெரிக்க எழுத்தாளர் வாஷிங்டன் இர்விங் எழுதிய 'பேய் மாப்பிள்ளை' கதையை ஆதாரமாகக் கொண்டது.

## ஆண்டர்சன் கதைகள்

பாரதி விழாவில் இரண்டாம் நாளன்று தலைமை வகித்த திரு சுந்தர வடிவேலு, 'நல்ல விஷயங்களைக் குழந்தைகளுக்குத்தான் சொல்ல வேண்டும்' என்றார். உண்மைதான். பெரியவர்களுக்குக் கூறிப் பயன் என்ன? ஒன்று, 'எனக்கு எல்லாம் தெரியும்' என் என்பார்கள். அல்லது நாம் சொல்வது தவறு என வாதாடுவார்கள்.! எனவேதான் பெரியவர்களுக்கு எழுதிய பாரதி, 'ஆயிரம் உண்டிங்கு ஜாதி – எனில் அந்நியர் வந்து புகலென்ன நீதி?" என்றார். குழந்தைகளுக்கு எழுதியபோதோ, ' ஜாதிகள் இல்லையடி பாப்பா ' என்றார் ! பாரதியின் பாடல்கள் எல்லாமே அமரத்வம் பெற்றன என்றாலும் 'ஓடி விளையாடு பாப்பா' அளவுக்கு மக்கள் நாவில் அடிபட்டு, மனத்தில் பதிகிற பாடல் வேறு இருக்க முடியாது. தொட்டில் பருவத்திலிருந்து கேட்கிற பாடல் அல்லவா? எனவே குழந்தை இலக்கியம் படைப்பவர்கள் அதிர்ஷ்டசாலிகள்.

டென்மார்க் நாட்டைச் சேர்ந்த ஹான்ஸ் கிரிஸ்டியன் ஆண்டர்சனை எடுத்துக் கொள்

ளுங்கள். அவர் சிறந்த கவிஞர், நாடகாசிரியர். ஆனால் அவை எல்லாவற்றையும் விட அவர் பிரசித்தி பெற்றது தமது குழந்தைக் கதைகளுக்காகவே! இன்று அவர் மறைந்து நூறு ஆண்டுகளாகி விட்டன. உலக மெங்கும் விழா எடுக்கிறார்கள். அவர் பெயரைச் சொன்ன மாத்திரத்தில் இன்றும் நினைவு வருவது அவரது குழந்தைக் கதைகளே. அந்தக் கதைகளில் என்னென்னவோ மாய ஜாலங்கள் நடக்கும்; மந்திர தந்திரங்கள் நிகழும்; துன்பங்கள் தொடரும்; வெற்றிகள் கிட்டும். அத்தனையும் கண்ணெதிரே நிகழ்வன போல் குழந்தைகள் எண்ணி ஆர்வத்துடன் கேட்பார்கள், படிப்பார்கள்.

மிக உயர்ந்த விஷயங்களைக் கதைகளில் குழைத்துக் கொடுத்து விடுவார் ஆண்டர்சன். விளக்கிச் சொல்ல மாட்டார். கதை மனத்தில் பதிந்து விட்டால் கருத்து தானாகவே உள்ளத்தில் மலரும் என விட்டு விடுவார். கதைகளில் உள்ள இலக்கிய நயங்களோ சொல்லி மாளாதவை. பல்வேறு நாடுகளில் சூழ்நிலைகள், மக்களின் பழக்க வழக்கங்கள் கதைகளினூடே புரிய வரும். இத்தகைய அற்புதக் கதைகளை திரு ப. ராமசாமி தடங்கலின்றி எளிதாகப் படித்துக்கொண்டு போகிற மாதிரி அருமைத் தமிழில் பெயர்த்துள்ளார். சில கதைகளில் பெயர்களையும் தமிழ்ப்படுத்தியிருப்பதும் வேறு சிலவற்றில் அசல் பெயர்களையே வைத்திருப்பதும் நெருடலாயுள்ளன.

பெரிய எழுத்துக்கள். எனவே அச்சுப் பிழைகளும் பெரிதாகத் தெரிகின்றன. அழகான படங்கள். ''பனி இளவரசி''; ''அன்னப் பறவைகள்'' என்ற தலைப்புக்களில் வெளிவந்துள்ளன ஆண்டர்சன் கதைகள்.

—கி. ராஜேந்திரன்

கிடைக்குமிடம் : வானதி பதிப்பகம், சென்னை—17. விலை ஒவ்வொன்றும் ரூ. 3—50.

## அறிமுகம்

## SOUTH INDIA BOOK INDUSTRY

தென்னாட்டில் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் வெளியாகும் புத்தகங்களைப் பற்றிய குறிப்புக்களும் விவரங்களும் சேகரித்து வெளியிடுவது இப்பத்திரிகையின் நோக்கம். புத்தக பிரசுரத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களுக்கும் விற்பனைத் துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கும், கல்வி நிலையங்களுக்கும் புத்தகாலயங்களுக்கும் பெரிதும் பயன்தரக்கூடிய மாத வெளியீடு.

ஆசிரியர்: டி. வி. எஸ். மணி; விலாசம்: 11, கங்குராம செட்டித் தெரு, சென்னை 1; ஆண்டுச் சந்தா ரூ. 20. தனிப் பிரதி: ரூ. 2.

## சண்முகா

பம்பாய், சண்முகானந்த சபை நுண்கலைகளுக்கு அரங்கிலே ஆற்றி வரும் தொண்டு போதாதென்று தற்போது சண்முகா என்ற பெயரில் ஒரு காலாண்டுப் பத்திரிகையையும் தொடங்கியிருக்கிறது. ஆங்கிலத்திலும் தமிழிலும் பல கட்டுரைகளைத் தாங்கி வரும் இதன் முதல் இதழில் ஸ்ரீ செம்மங்குடி, தமது இசை உலக அனுபவங்களை விவரிக்கிறார். ஸ்ரீ கே. எஸ். நாராயணசுவாமி வீணை வித்தையின் சிறப்புக் குறித்து எழுதுகிறார். கர்நாடக சங்கீதத்தின் வளர்ச்சி — எதிர்காலம் என்பது பற்றி லால்குடி திரு ஜெயராமன் தமது கருத்துக்களை வெளியிடுகிறார்.

ஆசிரியர் திரு கே. எஸ். மகாதேவன், விலாசம்: சண்முகானந்த சபா, பம்பாய்—22 விலை ரூ. 1—00. ஆண்டுச் சந்தா ரூ. 3—50.

---

## பாரதி விழா புதுமை - 2

தாகூர் - பாரதி பெயர்களால் அரங்கம் அமைக்க நகரின் மையமான பகுதியில் நிலம் ஒதுக்கியுள்ளது தமிழக அரசு. இதற்கு வாழ்த்துத் தெரிவித்து முதல்வருக்குக் கேடயம் வழங்கினார் பாரதியார் சங்கத் தலைவர் திரு என். மகாலிங்கம். (படம்) முதல்வர் கூறுவார்:

ஒரு சமயம் பட்டிமன்றத்தில் நான் பேசும்போது எதிர் தரப்பாளர் பெண்ணின் சிறப்பை எடுத்துரைக்கத் 'தாய்நாடு என்றுதான் பிறந்த தேசத்தை அழைக்கிறோம்' என்றார். நான் பதிலளிக்கையில் 'நம் தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே' என்றுதான் பாரதி பாடினார் என்று கூறி அவரை மடக்கிவிட்டேன்!





## பாரதி விழா புதுமை - 3

மாதர் ஆண்டு என்று பெண்கள் மட்டுமே பெருமை கொள்ள முடியாது. அதிலேயே ஆண் சிறப்பும் அடங்கி யிருக்கிறது. ''பெண் - ஆண் - டு'' என்று எழுதிப் பார்த்தால் விளங்கும் என்று கூறிச் சிரிக்க வைத்த நமது முதல்வர் சிந்தனைக்கும் விருந்து அளித்தார்:

பாரதியின் கவியால் சுதந்திரம் பெற்ற நாட்டினரான நாம் பாரதி குறிப்பிட்ட சுதந்திரப் பெருமையையும் புரிந்துகொள்ள வேண்டும்.

மண்ணில் இன்பங்களை விரும்பிச் சுதந்திரத்தின்
மாண்பினை இழப்பாரோ
கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கினால்
கைகொட்டிச் சிரியாரோ

என்றபடி பெற்ற சுதந்திரத்தைப் பேணிக் காக்கவும் வேண்டும்.

# கண்டிக்கும் உள்ளத்தில் கருணையும் உண்டு...

## நான் வணங்கும் மனித தெய்வம் — 8

'டீன் ஏஜ்' பருவத்திலிருந்து இன்னும் இறங்கி வராத நெஞ்சம். அப்போது என்னுடைய திருமணம் நிச்சயிக்கப்பட்டிருந்தது. திருமணம் என்றவுடன் என்னென்னவோ புரிபடாத இன்பக் கனவுகளில் மூழ்கியிருந்தேன்.

இந்நிலையில் தான் நடந்தது அது. என் வருங்கால மாமனார், இடறி விழுந்து கால் எலும்பு முறிவு ஏற்பட்டு மருத்துவ மனையில் சேர்ந்தார். காலை அசைக்கக் கூடாது என்று டாக்டர்கள் கட்டளை.

திருமண நாளை ஆவலுடன் எதிர்நோக்கியிருந்த எங்கள் குடும்பத்துக்கு இது ஒரு சோதனை. இந்த நிலையில் திருமணம் எப்படி நடக்கும் என்ற கவலை.

என் மாமனார் ஓய்வு பெற்ற அதிகாரி. அவரைக் கண்டாலே அவர் வீட்டாருக்கு நடுக்கந்தான். 'ரூல்ஸ்', 'டிஸிப்ளின்' என்று உத்தியோகத்தில் இருக்கும் போதே கடைப்பிடித்தவர்; ஓய்வு பெற்ற பின்பும் அதை முழுமையாக வீட்டில் கடைப்பிடித்து வந்தார். இதெல்லாம் எனக்குத் தெரியும். ஏற்கனவே பத்திரிகைஅச்சடித்து வினியோகித்தாயிற்று. என்ன ஆகப் போகிறதோ என்ற கவலையோடு என் வருங்கால மாமனாரைப் பார்த்து வர என் வீட்டார் மருத்துவ மனைக்குப் போன போது என் புக்ககத்தவர் யாரும் முகம் கொடுத்தே பேசவில்லை. ஆனால் அந்நிலையிலும் என் மாமனார் புன்சிரிப்போடு என் வீட்டாரிடம் கல்யாணம் நிச்சயமாக நடக்கும் என்று உறுதி கூறினார்.

ஆக, என் மாமனார் அசையாமல் கால் கட்டுடன் மருத்துவ மனையில் படுத்த படுக்கையாக இருக்க, என் கழுத்தில் மூன்று முடிச்சு விழுந்தது. அன்றே ஆஸ்பத்திரிக்கு நாங்கள் தம்பதியாகச் சென்று அவரை நமஸ்கரித்த போது என் கண்களிலிருந்து விழுந்த துளிகள் அவர் கால் கட்டை நனைத்தன. அவர் என் தலையைத் தொட்டு ஆசீர்வதித்தார்.

என் புக்ககத்தார் ஒரு திருமணத்துக்காக வெளியூர் சென்று விட்டனர். நான், என் மாமனார், என் கணவர் — மூவருந்தான். மாமனார் உண்ணும் அளவு குறைவாயிருந்தாலும் ருசியுடன் சாப்பிடக் கூடியவர். எனக்கோ சமையல் கலையில் பத்து சதவீதந்தான் தெரியும்! எப்படியோ அன்று சமைத்து முடித்தேன். மாமனாருக்குச் சாப்பாடு போடும்போது கை கால் பதறிச் சாதம் கண்டபடி சிதறியது. அவர் பொறுமையுடன் அதைப் பொறுக்கித் தம் இலையில் போட்டுக் கொண்டார். ஒரு சமயம் என் மாமியார் அவருக்கு உணவு பரிமாறும் போது ஒரு கட்டி சிதறிக் கீழே விழுந்ததாம். அவர் கோபத்துடன் இலையை இழுத்து எறிந்து விட்டுச் சாப்பிடாமல் போய் விட்டாராம்! அவரா இப்படி...?

அவர் சாப்பிட்டு எழுந்ததும் என் கணவர் சாப்பிட உட்கார்ந்தார். ரசத்தைக் கையில் வாங்கிக் குடித்தவர், துள்ளினார்! 'அப்பா சாப்பிட்டு விட்டாரா?' என்றார். பின்னர் விஷயம் தெரிந்தது. ரசத்தில் ஒரே காரம்; உப்புப் போடவே இல்லை! என் மாமனாருக்கோ மூல வியாதி. எனக்குக் கையும் காலும் ஓடவில்லை. ஒரே ஓட்டமாக மாடிக்கு ஓடினேன். அவர் சாய்வு நாற்காலியில் லேசாக முனகியபடியே படுத்திருந்தார். தடாலென்று காலில் விழுந்தேன். அவர் "இதோ பார், உன் மாமியார் சமையலாகட்டும், பரிமாறுவதிலாகட்டும் மிகவும் கெட்டிக்காரி. அவளது சிறிய அஜாக்கிரதையைக்கூட நான் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. நீ புதுசில்லையா...?" என்றார், எனக்கு ஆறுதலாக.



இன்று அவர் எங்களிடையே இல்லை. அவர் உருவப் படத்தை எங்கள் குல தெய்வம் கோமதியின் உருவப்படத்துடன் இணைத்து வைத்து நான் காலையில் எழுந்தவுடன் வணங்கத் தவறுவதில்லை. — கமலா தோதாத்ரி

# இந்தியாவிலும். அயல்நாடுகளிலும் இப்பொழுது அதிகமான அளவில் தேவைப்படுகிறது இந்த தேங்காய் நார்







Crusher

# குறைந்த முதலீட்டில் சிறந்த முறையில் தேங்காய் நார் தயாரிக்க இயந்திரங்கள் இதோ!

தேங்காய் நார் தயாரிக்க இந்தியாவில் இதுவரை சரியான இயந்திரங்கள் இல்லாமல் இருந்தது. அதிக அளவு உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்ய முடியாமல் இருந்தது.

இப்பொழுது இதற்குத் தேவையான எல்லா இயந்திரங்களையும் நாங்கள் தயாரித்துள்ளோம். இதன் மூலம் நீங்கள் குறுகிய காலத்தில் அதிக அளவு தேங்காய் நார் உற்பத்தி செய்யலாம். அதிக அளவு ஏற்றுமதியின் மூலம் அதிக வருவாய் தேடிக் கொள்ளலாம்...
உங்களுக்கும் உங்கள் தேசத்திற்கும்!

இதுவரை தென் இந்தியாவில் 12 இடங்களில் எங்கள் என்னுர் இயந்திரங்கள் நல்ல முறையில் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன

மற்ற விபரங்களுக்கும் சரியான ஆலோசனைக்கும் எங்களை அணுகுக:

Manufacturers:
**BHARAT MOTORS**
5, Greames Road, Madras-600006
Phone: 86204 Cable: FIBRO-FLEX



Turbo Cleaner



Defibering Machine



Fibre Baling Press



Revolving Screener

# அந்த லைசென்ஸ் வேண்டாம்!

பஞ்சாபில் பிச்சைக்காரர்களின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்தப் பிச்சைக்காரர்களுக்கு லைசென்ஸ் வழங்கப் போகிறார்கள். இந்த சர்ட்டிபிகேட் இல்லாமல் பிச்சை எடுப்பவர்கள் பிச்சைக்காரர்கள் விடுதிக்கு அனுப்பப்படுவார்கள்.

— டைம்ஸ் ஆஃப் இந்தியா
















கருத்து பாலி

# பொன்னியின் புதல்வர்



சுந்தா

## 61. மூன்றாவது சிறைவாசம்

நாடியே அடைந்தது சிறைவாசம்
நாடாது அடைந்தது சுகவாசம்

கல்கியின் மூன்றாவது சிறைவாசம், 1941 ஜனவரி 21ம் தேதியன்று ஆரம்பமாயிற்று. அவருடைய முன் இரண்டு சிறைவாசங்களைப் போன்றதல்ல அது. ஆகவே, அவற்றில் அவர் பட்ட கஷ்டங்களை நினைத்துக் கொண்டு, அனுதாப மனநிலையுடன் இந்த அத்தியாயத்தைப் படிக்க வேண்டியதில்லை.

தண்டனை வாசகத்தின்படி, அது ''கடுங்காவல்'' என்பதாய் இருந்த போதிலும் நடைமுறையில் அப்படி இருக்கவில்லை. கல்கி எதிர்பார்த்தபடி அது நெடுங்காவலாகவும் இருக்கவில்லை— மூன்று மாதங்கள்தான்; அதிலும் தள்ளுபடி பத்து நாள். சிறைவாசம் என்பதனால், சிறைச்சாலையின் வரம்புக்குள் வசிக்க வேண்டியதான கண்டிப்பு உண்டுதான்; ஆனாலும், அந்த வரம்புக்கு உள்ளேயே அது, அருமையான சகவாசத்துடன் கூடிய சுகவாசமாய் இருந்தது.

முந்தியப் பத்தாண்டு காலத்தில், சிறைக் கைதிகள் சம்பந்தமாய், குறிப்பாக அரசியல் கைதிகள் சம்பந்தமாய், சீர்திருத்தங்கள் உண்டாகி யிருந்தன. ஆட்சிப் பொறுப்பில் பங்கு கொண்ட காங்கிரஸ்காரர்களே அவற்றுக்குக் காரணமாய் இருந்தார்கள். அண்மைக் காலம் வரை ஆட்சியாளராயும் சட்ட மன்ற உறுப்பினராயும் இருந்தவர்கள், அப்போது சிறை புகுந்திருந்ததால், சிறை அதிகாரிகளும், சிப்பந்திகளும்,, பாதி மரியாதையினாலும், பாதி பயத்தினாலும், அந்தச் சீர்திருத்தங்களின் படியே மாறுபாடின்றி அவர்களை நடத்த வேண்டியதாயிற்று.

ஆம், சுகமான சிறைவாசந்தான்; ஆனால், அதற்கு முன்னால் மோசமான சுகக் கேடு ஒன்றிலிருந்து கல்கி விடுதலை பெற வேண்டியதாய் இருந்தது. ஏற்கனவே குறிப்பிட்ட பொல்லாத ஆஸ்த்துமா நோய்தான் அது. இடைவிடாத இருமல். நடமாடவும் முடியாது. படுத்துக்கொள்ளவும் முடியாது. தூக்கமே கிடையாது. அந்தக் கொடிய நோயை உடம்பிலே வைத்துக் கொண்டு சிறை புகுந்தால், அவருக்குத் தொல்லை என்பதோடு, அவருடைய குடும்பத்தாருக்கும் பெரும் கவலையாக இருக்கும். வெவ்வேறு உறவினர்களும் நண்பர்களும் அந்த நோயை முறியடிப்பதற்காக வெவ்வேறு வைத்தியர்களையும், வைத்திய முறைகளையும் சிபாரிசு செய்தார்கள். எதை ஏற்றுக் கொள்வது என்று தெரியாமல் கல்கி திணறிக் கொண்டிருக்கையில், நண்பர் டி. சதாசிவம், எல்லோருடைய யோசனைகளையும் அடித்துத் தள்ளிவிட்டுத் திருச்சியிலிருந்து ஆஸ்த்மா நிபுணர் ஒருவரை அவசரமாய் வருவித்தார். அந்த நிபுணர் செய்த சிகிச்சையின் மூலம், வியாதி அறவே குணமாகா விட்டாலும் அடங்கி ஒடுங்கிப் போயிற்று.

முன் இரண்டு சிறை வாசங்களின் போது சிறைக்கு உள்ளேயே துணைவராய் இருந்த அதே நண்பர் சதாசிவம், பின்னர் கல்கி தமது பத்திரிகையின் 16—2—42 இதழில் எழுதியது போல் — '' 'இந்தத் தடவை நான்தான் ஜெயிலுக்கு வருவதற்கில்லை; உங்களையாவது அனுப்பிவிட்டு வருகிறேன்' என்று சொல்லி 21 நாள் என் கூடவே

● ஐந்து முறை சிறை சென்ற கப்ரி தம்முடன் தமது மனைவி கமலாவையும் தேசியப் போராட்டத்தில் ஈடுபடுத்திச் சிறைபுகச் சென்றவர்.



இருந்து சிறைக் கதவு என் பேரில் சாத்தப்பட்ட பிறகுதான் திரும்பிப் போனார்.''

தமது சத்தியாக்கிரகத்துக்குக் கல்கி தேர்ந்தெடுத்த ஊர் மாயூரம் — அல்லது அவர் காலத்தில் வழங்கியபடி, மாயவரம்—அல்லது அவருடைய ''கள்வனின் காதலி'' நாவலில் உள்ளபடி, ராயவரம். அந்த ஊரிலும் சுற்றுப் புறங்களிலும் பல தீரச் செயல்கள் புரிந்திருந்த ஜி. நாராயணசாமி நாயுடு, தாம் சத்தியாக்கிரகம் செய்வதற்காக நிச்சயித்திருந்த தேதியையும் இடத்தையும், கல்கி கேட்டுக் கொண்டதன் பேரில் அவருக்கு விட்டுக் கொடுத்தார். —ஜனவரி 21ம் தேதி சின்னக் கடைத் தெரு.

ஜனவரி முதல் வாரத்தில் சென்னையிலிருந்து தமது குடும்பத்தாருடன் கல்கி புறப்பட்டு, மாயூரத்தில் பால்ய நண்பர் ஆர். கே. சுப்பிரமணியத்தின் வீட்டில் தங்கி, அந்த ஊரில் செய்ய வேண்டிய ஏற்பாடுகளைக் கவனித்து விட்டு, புத்தமங்கலம் போனார். அங்கே முத்தண்ணா வேங்கடராமய்யரின் குடும்பத்துடன் தமது மனைவியும் குழந்தைகளும் சேர்ந்து வசிக்க ஏற்பாடு செய்தார். குறைந்தது ஒரு வருஷமாவது சிறைத் தண்டனை கிடைக்கும் என்று அவர் எதிர்பார்த்ததால், அதற்கு ஏற்றபடி இருந்தன அவர் செய்த ஏற்பாடுகள். ஐந்து வயதுச் சிறுவன் ராஜேந்திரனை மணல்மேட்டுப் பள்ளிக்கூடத்தில் சேர்த்தார். அடையாற்றில் ஆனந்தி கற்கத் தொடங்கியிருந்த பரத நாட்டியம் விட்டுப்போகாமல் இருப்பதற்காக, பக்கத்துப் பந்தநல்லூரிலிருந்து மீனாட்சி சுந்தரம் பிள்ளை வந்து அவளுக்குத் தொடர்ந்து பயிற்சி அளிக்கச் செய்தார். குழந்தைகளுக்கு நல்ல பால் கிடைக்க வேண்டும் என்பதற்காகப் பசு ஒன்றை வாங்கி வளர்க்கச் செய்தார். இன்னும் சில ஏற்பாடுகள் இம்மாதிரியே.

சத்தியாக்கிரகத் தேதிக்கு நாலு நாள் முன்னதாகவே தமது குடும்பத்தாருடன் மாயூரத்துக்குக் கல்கி திரும்பி, தெற்குத் தெருவில் சுப்பிரமணியம் வீட்டில் ''முகாம்'' போட்டுக் கொண்டார். 19ம் தேதி அவ்வூரில் கூடிய மாவட்டக் காங்கிரஸ் மகாநாட்டில் அவர் தலைமை வகித்தார். பலவீனமான உடல்நிலை காரணமாய்த் தம்மால் அதிகமாய்ச் சிரமப்படவோ, எழுந்து நின்று நெடு நேரம் பேசவோ இயலாது என்று, ஏற்கனவே அவர் தெரிவித்திருந்தார். செயலாளர் நாராயணசுவாமி நாயுடுவும் அதற்கு இணங்க அவருக்குக் கஷ்டம் இல்லாதபடி பார்த்துக் கொண்டார்.

21ம் தேதி ஆயிரக் கணக்கான மக்களின் மத்தியில் ஒரு விழாவைப் போல் கல்கியின் சத்தியாக்கிரகம் நடைபெற்றது. சதாசிவம், சுப்பிரமணியம், நாராயணசாமி நாயுடு, சின்னையாப் பிள்ளை, சுவாமி அய்யங்கார் முதலானோர் அதற்கென வெகுவான ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். அதற்கு முதல் நாள், கோயமுத்தூரிலிருந்து நகரசபைத் தலைவர், ''சுப்ரி'' என்ற



○ 'கல்கி' மாயூரத்தில் தனி நபர் சத்தியாக்கிரகம் செய்தபோது... பெருங் கூட்டத்தின் ஒரு சிறு பகுதியைப் படத்தில் காணலாம். மையத்திலிருக்கும் முக்கியஸ்தர்களில் இடமிருந்து வலமாக: அங்கவஸ்திரம், மூக்குக்கண்ணாடி அணிந்திருப்பவர் சுப்ரி, அடுத்து சுவாமி அய்யங்கார், 'கல்கி' மகள் ஆனந்தியின் தோள்மீது கைவைத்து அணைத்தபடி இருக்கிறார், பக்கத்தில் நாராயணசுவாமி நாயுடு சிறுவன் ராஜேந்திரனைத் தூக்கிக் கொண்டிருக்கிறார், அவர் அருகில் சதாசிவம்.

கே. சுப்பிரமணியம் வந்து, கல்கியைச் சிறைக்கு அனுப்புவதில் அவர்களுடன் உற்சாகமாய்ச் சேர்ந்து கொண்டார். கல்கிக்கும் சதாசிவத்துக்கும் மிகவும் வேண்டியவரான அவர், ஐந்து முறை சிறைபுகுந்த அபூர்வ அனுபவசாலி; அதை விட அபூர்வமாக, தேசியப் போராட்டத்தில் தம்முடன் தமது மனைவி கமலாவையும் ஈடுபடுத்திச் சிறை புகச் செய்தவர்.

அன்று நடந்த சத்தியாக்கிரக ''விழா'' பற்றி, ''மூன்று மாதம் கடுங்காவல்'' என்ற கட்டுரைத் தொடரில் பின்னர் கல்கி வர்ணித்து எழுதினார். (தாம் சம்பந்தப்பட்டது என்ற காரணத்தால், குறைத்துக் கூறியே அதை அவர் வர்ணித்துள்ளார் என்பது, அப்போது உடனிருந்த நண்பர்கள் சொல்லும் விவரங்களிலிருந்து தெரிகிறது.)

நண்பர் வீட்டிலிருந்து சின்னக் கடைத் தெருவை நோக்கிக் கிளம்பினேன். — கால் நடையாகத்தான். கிளம்பிய இடத்திலேயே நண்பர்கள் பலர் கூடியிருந்தார்கள். போகப் போக ஜனக் கூட்டம் அதிகமாகிக் கொண்டிருந்தது. வழியிலிருந்த பிள்ளையார் கோவிலில் சிறிது நின்றோம். குருக்கள் தீபாராதனை செய்தார். ''ஸ்வாமி, பகவானே! என்னை அதிகமாய்ச் சோதிக்கக் கூடாது. இன்று ராத்திரிச் சாப்பாடு சர்க்கார் செலவிலே நடக்க வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டேன். சின்னக் கடைத் தெரு முனை போவதற்குள் ஆயிரக் கணக்கான ஜனங்கள் கூடி விட்டார்கள். அவர்களுக்கு மத்தியில் வழி செய்து கொண்டு குறிப்பிட்ட இடம் போய்ச் சேர்வது மிகவும் பிரயாசையாகி விட்டது. இடத்துக்குப் போய்ச் சேர்ந்த பிறகுதான் என்ன? அவ்வளவு பேர் சேர்ந்து போடும் கூச்சலுக்கு மத்தியில் என் பேச்சு யார் காதில் விழப் போகிறது? ''இது என்னமாய்த்தான் முடியுமோ?'' என்று கலங்கினேன். அப்போது நண்பர் ஸ்ரீ நாராயணசாமி நாயுடு என் ஒத்தாசைக்கு வந்தார். ஒரு உயரமான மேஜையை எங்கிருந்தோ கொண்டு வந்து விட்டார். அதன்மேல் ஏறி நிற்கச் சொன்னார்.

மேஜை மேல் ஏறி நின்று அந்த ஜனத் திரளைப் பார்த்ததும் என்னுடைய மனத்தில் ஒரு பெரிய மாறுதல் உண்டாயிற்று. அவ்வளவு பேருடைய உள்ளமும் என் மனதுடன் கலந்து விட்டதாகத் தோன்றியது. ''தேகங்கள் வெவ்வேறாயினும் அவற்றுள் வசிக்கும் ஆத்மா ஒன்றே'' என்னும் வேத வாக்கியம் நினைவுக்கு வந்தது. ''சத்தியாக்கிரகம் நான் மட்டும் செய்யவில்லை; இங்கே கூடியிருக்கும் ஏழாயிரம் எட்டாயிரம் பேரும் என் மூலம் சத்தியாக்கிரகம் செய்கிறார்கள்'' என்ற உறுதி உண்டாயிற்று. கூட்டத்தில் அநேகம் பேருடைய கண்களில் ஜலம் ததும்புவதைப் பார்த்தேன்; என்னும் இல்லாத வண்ணம் என் கண்ணிலும் ஜலம் துளிக்கத் தொடங்கியது. உணர்ச்சி மிகுதியினால் தொண்டையை அடைத்துக்கொண்டது. சொல்ல வேண்டிய வார்த்தைகளை சொல்ல முடியாமலே போய்விடுமோ என்று ஒரு கணம் திகிலடைந்தேன். ஒருவாறு இந்த நிலைமையை எதிர்பார்த்து, சொல்ல வேண்டிய வார்த்தைகளை ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதி வைத்திருந்தேன். இப்போது சட்டைப் பையில் பார்த்தால் அந்தத் துண்டுக் காகிதத்தைக் காணோம். கூட்டத்தின் நெருக்கடியில் எங்கேயோ போய்விட்டது. பக்கத்திலிருந்த நண்பரிடம் காகிதமும் பேனாவும் வாங்கினேன். அவசரம் அவசரமாக வார்த்தைகளை ஞாபகப்படுத்திக் கொண்டு எழுதினேன். விரல்கள் நடுங்கின. பேனாக் குளறியது. எப்படியோ எழுதி முடித்தேன். அதற்குள் ஸ்ரீ நாராயணசாமி நாயுடு தமது பெருங் குரலில் வேண்டிக் கொண்டு அவ்வளவு ஜனங்களையும் உட்காரச் செய்துவிட்டார். காகிதத்தில் எழுதியிருந்ததை ஒரு பெரு முயற்சி செய்து வாசித்தேன். வாசிக்கும்போதே, ''நல்ல வேளை, தொண்டை அடைத்துக் கொள்ளாமல் வார்த்தைகள் குழறாமல் ஸ்பஷ்டமாக வருகின்றனவே'' என்ற எண்ணமும், ''ஆஹா, ஜனங்கள் எவ்வளவு நிசப்தமாக இருக்கிறார்கள்'' என்ற நினைவும் தோன்றின. அந்த நாலைந்து வாக்கியங்களைப் படித்து முடித்ததும் ஒரு பெரிய சோதனையில் தேறி வெளிவந்து விட்டது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று.

தாம் வாசித்த வாக்கியங்கள் என்ன என்பதைத் தமது கட்டுரைத் தொடரில் கல்கி எழுதவில்லை.

என்ன வாக்கியங்களோ, அவற்றைப் படித்து முடித்துப் பூமாலைகளுக்குள் இணைறிக் கொண்டிருந்த கல்கியை, மாயவரம் போலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் மீட்டு, ''உம்மை இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்படி கைது செய்கிறேன். என்னுடன் வரவும்'' என்றார்.

இந்த வார்த்தைகள் காதில் விழுந்ததும் ஓர் அற்புதமான, ஆனந்தமான கனவிலிருந்து விழித்துக் கொண்டேன். உயரமான மேஜை மீதிருந்து கீழே மெதுவாக இறங்கினேன். சுற்றிலும் உட்கார்ந்திருந்த ஆயிரக் கணக்கான ஜனங்கள் கொஞ்ச நேரம் எழுந்திராமல் இருக்க வேண்டுமே, எழுந்திருந்தால் அல்லோல கல்லோலமாய்ப் போய் விடுமே என்று நெஞ்சு ஒரு கணம் துணுக்குற்றது. நல்ல வேளையாய் ஒருவரும் எழுந்திருக்கவில்லை. சர்க்கிள் இன்ஸ்பெக்டரைத் தொடர்ந்து தூக்கத்தில் நடப்பது போல் நடந்து சென்றேன். கூட்டத்தை யெல்லாம் தாண்டி அப்பால் போனதும், அங்கே

''இந்தக் காரை எப்படியாவது விலை பேசி, வார்கிட்டேயாவது தள்ளி விடணும்...
அதற்கு உனக்கு என்ன வேணும் சொல்லு!''
''ஒரு தனி சாமர்த்தியம் வேணுங்க!....''

-தாஜா

''நான் புதுசா பிஸினஸ் ஆரம்பிச்சிருக்கேன்... பல் இல்லாத கிழவர் யாராவது இருந்தால் சொல்லு. உடனே வேலைக்கு எடுத்துக்கறேன்....''
''என்ன பிஸினஸ் ஸார்?''
''முறுக்கு, சீடை, கடலை உருண்டை பிஸினஸ்!''
எஸ்.வி.ஆர்.



நின்ற ஜட்காவண்டியில் என்னை ஏறிக் கொள்ளச் சொன்னார். ஏறிக் கொண்டேன். இன்ஸ்பெக்டரும் ஏறி உட்கார்ந்தார். வண்டி நகரத் தொடங்கியது.

அப்போது கூட்டத்திலிருந்து ஒரு பெரிய ஜயகோஷம் எழுந்தது. அத்தனை நேரமும் பொறுமையுடன் உட்கார்ந்திருந்த ஜனங்கள் சொல்லி வைத்தாற் போல் பளிச்சென்று எழுந்தார்கள். ஏழாயிரம் எட்டாயிரம் தொண்டைகளிலிருந்து ''மகாத்மா காந்திக்கு ஜே!'' என்ற கோஷம் ஏக காலத்தில் எழும்பிற்று.

அப்படிக் கோஷம் இட்டவர்களில் பலர் ஜட்காவைத் தொடர்ந்து சென்றார்கள். தாலுகா கச்சேரியை அடுத்துள்ள ஸப் ஜெயிலுக்குள் ஓர் அறையில் விசாரணை நடந்தது. விசாரித்தவர், ஸர் டி. சிவஞானம் பிள்ளையின் குமாரர் ஆவுடையப்ப பிள்ளை.

மாஜிஸ்டிரேட் தீர்ப்பை வாசிக்கத் தொடங்கினார். சட்ட நுணுக்கங்கள் ததும்பிய சில வாக்கியங்களைச் சொல்லிவிட்டு, கடைசியாக என்னை நிமிர்ந்து பார்த்து, ''ஆகையால் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் பிரகாரம் உம்மைத் தண்டிக்கிறேன்: மூன்று மாதம் கடுங்காவல், அபராதம் ரூபாய் 250'' என்றார்.

பிரமாத ஏற்பாடுகள் செய்துவிட்டு, ஒரு வருஷ சிறை வாச தண்டனைக்குத் தயாராக வந்திருந்தேன். ஆகவே, ''மூன்று மாதம்'' என்றதும், பெரும் ஏமாற்றம் உண்டாயிற்று. பக்கத்திலிருந்த சிநேகிதர்களைப் பார்ப்பதற்கும் சங்கோசமாக இருந்தது. விஷயம் தெரிந்ததும் குழந்தைகள் என்னைப் பார்த்து மலர்ந்த முகத்துடன் புன்னகை செய்தார்கள். அவர்களுடைய சந்தோஷப் புன்னகையில் கூடப் பரிகாசம் கலந்திருந்ததாக எனக்குத் தோன்றியது.

கச்சேரி வாசலில் காத்துக் கொண்டிருந்த பொதுஜனங்களும் தொண்டர்களும் என்ன எண்ணினார்களோ தெரியாது. இவ்வளவு ஆர்ப்பாட்டங்களுக்குப் பிறகு ''மூன்று மாதம் தண்டனை'' என்று அறிந்ததும் அவர்களுக்குச் சப்பென்றுதான் போயிருக்கும்.

கல்கியைத் திருச்சி சிறைச்சாலைக்கு மறுநாள் அனுப்பி வைப்பதென்று ஏற்பாடாயிற்று. அதுவரை அவருக்குஅந்த மாயவரம் ஸப்ஜெயிலிலேயே தனி வாசம். அவரிடம் அப்போது, சென்னையில் வழியனுப்பி வைத்த நண்பர்களில் சிலர் கொடுத்த புத்தகங்கள் இருந்தன: தமது திருத்தங்களுடன் டி. கே. சி. அளித்த கம்ப ராமாயண அயோத்தியா காண்டம்; வி. வி. சீனிவாச அய்யங்கார் இயற்றியதும் கொடுத்ததுமான கீதோதயம்; வால்மீகி ராமாயண ஆராய்ச்சி நூல் -- எழுதியவர் மாஸ்தி வேங்கடேச அய்யங்கார், அளிதவர் கி. சந்திரசேகரன். மற்றும் தாகூரின் கவிதைகளும், நாடகங்களும் அடங்கிய புத்தகம்.

நாலு அருமையான புத்தகங்கள் — பல தடவை படித்து அனுபவிக்கக் கூடிய புத்தகங்கள் — இருந்தும் அவற்றைப் பிரிப்பதற்கே மனம் வரவில்லை. காலை முதல் நடந்த சம்பவங்களும், ''இன்று ஒரு ராத்திரி மட்டுமே இங்கே இருக்க வேண்டும்; நாளைக் காலையில் திருச்சி சிறைக்குக் கொண்டு போய்விடுவார்கள். அங்கே ராஜாஜியைப் பார்க்கலாம்'' என்னும் நினைவும் மாறி மாறித் தோன்றி உள்ளத்தில் பரபரப்பை உண்டாக்கிக் கொண்டிருந்தன.

வேலூர் சிறையிலிருந்து திருச்சி சிறைக்கு ராஜாஜி மாற்றலாகி இருந்தார் என்பது முன்பே கல்கிக்குத் தெரியும்.

மறுநாள் திருச்சியை அடைந்து சிறைக்கு உள்ளே புகுந்ததுமே, வழி காட்டிச் சென்ற வார்ட் பையனிடம், ''ராஜாஜி எங்கே இருக்கிறார், அவரைப் பார்க்க முடியுமா?'' என்று கல்கி கேட்டார். ''யாரை வேணுமானாலும் பார்க்கலாம். ஜெயிலா இது?'' என்றான் அவன்.

ஜெயிலாக இல்லைதான் அது. காங்கிரஸ் மாநாடு ஒன்றின் விடுதிப் பகுதி மாதிரிதான் இருந்தது. கைதிகள் எல்லாரும் கேள்வி முறையின்றி, குறுக்கும் நெடுக்குமாய் உலாவிக் கொண்டும், அங்கங்கே கூடிக் கூடிப் பேசிக் கொண்டும் இருந்தார்கள். ''வாருங்கோ வாருங்கோ!'' என்று மகிழ்ச்சியுடன் கூவித் தம்மை வரவேற்ற தேச பக்தர் பூவராக அய்யங்காரிடம், ''இதென்ன ஜெயில் மாதிரியே இல்லையே?'' என்று கல்கி ஆச்சரியப்பட்டுக் கேட்டார்.

விரைவிலேயே ராஜாஜியின் பிளாக்குக்குக் கல்கி சென்றார்.

நான் போனபோது ராஜாஜி, அப்போதுதான் வந்திருந்த தினசரிப் பத்திரிகைகளைப்

பிரித்துப் படித்துக் கொண்டிருந்தார். என்னைப் பார்த்ததும், ''இதென்ன ஆச்சரியம்! இப்போதுதான் உன்னைப் பற்றிப் பத்திரிகையில் படித்துக் கொண்டிருக்கிறேன். எதிரில் நீ நிற்கிறாயே!'' என்றார்.

என்னுடைய விசாரணை, தண்டனையைப் பற்றிச் சொல்லிவிட்டு, ''உங்கள் தேக சௌக்கியம் எப்படி இருக்கிறது?'' என்று கேட்டேன். ''இங்கே முனுசாமிப் பிள்ளை இருக்கிற வரையில் என் தேக சௌக்கியத்துக்கு என்ன குறை வரப் போகிறது?'' என்றார். சிறையில் ராஜாஜியின் கார்டியன், தாயார், காரியதரிசி, காவலாளி — எல்லாமாய் இருந்தவர் ஸ்ரீ முனுசாமிப் பிள்ளை என்று தெரிந்தது.

பிறகு புன்னகையுடன், ''ஆனால் உனக்கு இங்கே வெய்யில் கொடுமை அதிகமாய் இருக்குமே! மேலே கள்ளிக்கோட்டை ஓடு!'' என்று சொன்னார். புதுப்பாளையம் காந்தி ஆசிரமத்தில் இருந்தபோது, கள்ளிக் கோட்டை ஓட்டைப் பற்றி நான் புகார் செய்தேன். அதை ராஜாஜி மறப்பதில்லை. நான் வெய்யிலுக்குப் பயப்படுகிறவன் என்று அடிக்கடி பரிகாசம் செய்வதுண்டு. அது போல்தான் இப்போதும் சொன்னார். அதற்கு நான், ''எனக்கு ஒரு கஷ்டமும் இல்லை. மூன்று மாதத்தில் போய்விடப் போகிறேன். நீங்கள் அல்லவா, ஏப்ரல் — மே மாதத்தில் இங்கே இருக்கப் போகிறீர்கள்?'' என்றேன்...

சாப்பாட்டுக்குப் பிறகு ராஜாஜியிடம் மறுபடியும் போனேன். ''குவாரண்டைனில் இடம் பிடித்துக் கொண்டேன். ரொம்பவும் சௌகரியமாய் இருக்கிறது'' என்றேன். ''காலையில் வால்மீகி ராமாயணம் வாசிக்கிறோம்; அதற்கு வந்துவிடு'' என்றார்.

பிறகு என்னுடைய தேக நிலைமையைப் பற்றிக் கேட்டார். ''ஆஸ்த்மா தொந்திரவு ரொம்ப அதிகமா யிருக்கறு என்று கேள்விப் பட்டேனே. இப்போது எப்படி இருக்கிறது?'' என்றார்.

''நல்ல வேளையாய்க் கொஞ்சம் சௌகரியமாய் இருக்கிறது'' என்றேன்.

பிறகு கல்கி குடிக்க வெந்நீர் வைத்துக் கொள்வதற்காக ''தர்மாஸ் பிளாஸ்க்'' ஒன்றைத் தாம் கொண்டு வந்திருந்ததாயும், அதைச் சிறை அதிகாரிகள் உள்ளே அனுமதிக்கவில்லை என்றும் தெரிவித்தார். அதைக் கேட்ட ராஜாஜி, தமது பிளாஸ்கைக் கல்கியின் உபயோகத்துக்கு உதவியதுடன், ஒவ்வொரு இரவிலும் அதில் வெந்நீர் நிரப்பிக் கொடுக்கவும் செய்தார்.

சுமார் இருநூறு பேர் அப்போது கல்கியின் சிறைச் சகாக்களாக இருந்தார்கள். அத்தனை பேர்களில் சிலரைத்தான் தமது கட்டுரைத் தொடரில் அவர் குறிப்பிட்டார். அந்தச் சிலரையும்கூட இங்கே கவனிக்க இயலாது. ஆயினும், எப்படி இருந்து எப்படி இருக்கப் போகிறவர்கள் எல்லாம் அங்கே ஒருங்கே குழுமி இருந்தார்கள் என்பதற்கு எடுத்துக்காட்டாக ஒரு சிலரைப் பார்க்கலாம்:

மாகாணப் பிரதம மந்திரியாக இருந்து சுதந்திர இந்தியாவின் கவர்னர்-ஜெனரல் பதவி வகிக்கப் போகிறவர் — ராஜாஜி.

மாகாண அமைச்சராய் இருந்து பாரதத்தின் ராஷ்டிரபதியாய் இருக்கப் போகிறவர் — வி. வி. கிரி.

முன்னர் மக்கள் தேர்ந்தெடுத்த பிரதிகளாய் இருந்து பின்னர் கவர்னர் பதவி அடைந்தவர்கள் — அனந்தசயனம் அய்யங்கார், கே. சந்தானம், கோபால் ரெட்டி, டாக்டர் சுப்பராயன்.

மக்கள் பிரதிநிதிகளாய் இருந்து, முதல் அமைச்சர்களாய் ஆட்சி செய்யப் போகிறவர்கள் — எம். பக்தவத்ஸலம், டி. பிரகாசம், ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார்.

அமைச்சர்களாய் இருந்தவர்கள் அல்லது இருக்கப் போகிறவர்கள் — டாக்டர் ராஜன், டி. எஸ். அவிநாசிலிங்கம், வி. ஐ. முனிசாமிப் பிள்ளை.

சுதந்திரத்துக்கு முந்திய மத்திய சட்ட சபையில் பிரிட்டிஷ் ஆதிக்கத்துக்கு எதிராகச் சமராடியவர் — எஸ். சத்தியமூர்த்தி.

முன்பும் பின்பும் பத்திரிகை ஆசிரியர் —டி. எஸ். சொக்கலிங்கம்.

எப்பேர்ப்பட்ட ஜமா! எத்தனை விதமான பெருமைகளும், பண்புகளும், திறமைகளும், ஈடுபாடுகளும் கொண்டவர்கள்.

வால்மீகி ராமாயண வகுப்பு ஒன்றைக் காலையிலும், திருக்குறள் வகுப்பு ஒன்றை மாலையிலும் ராஜாஜி நடத்தினார். கம்ப ராமாயணம், திவ்வியப்பிரபந்தம், சிலப்பதிகாரம் ஆகிய நூல்களின் வாசிப்பும் இடையிடையே நடந்தது. ஒவ்வொன்றிலும் கல்கி கலந்துகொண்டு, அந்தந்த இலக்கியத்தில் அக்கறை கொண்டோருடன் அளவளாவினார்.

எல்லாரையும் ஒருமித்துப் பார்த்துப் பழகுவதற்குச் சாப்பாட்டு நேரங்கள் வாய்ப்பளித்தன. சாப்பாடு என்றால், முன்மாதிரியான ஜெயில் சாப்பாடு அல்ல; இரும்பத் திரும்ப முள்ளங்கிக் குழம்பு அல்ல. விதவிதத் தகனைகளுடன் குழம்பு, விதவிதக் கறிகள், ரசம், மோர் நெய் எல்லாம் உண்டு. காலையில் காப்பி மாலையில் தேநீர். வெளியிலிருந்து தின்பண்டங்களையும் பழங்களையும் தருவித்துக்கொள்ளலாம்; பார்க்க வருவோர்

கொண்டு வந்து கொடுப்பதைத் தடையின்றி ஏற்கலாம். சில பணக்கார அரசியல் கைதிகளின் ஏற்பாட்டில் இரண்டு மூன்று தரம் விருந்துகள் கூட நடந்தன.

உண்மையில் இந்த மூன்று மாதக் கடுங்காவல் தண்டனையை அனுபவித்ததில் நான் கஷ்டப்பட்டேனா, சுகப்பட்டேனா? கஷ்டப் பட்டேன் என்று சொல்ல முடியாது...

அதோடு வெளியில் சுலபமாகக் கிடைக்கக் கூடாத அரிய பாக்கியத்தையும் அநுபவித்தேன். ராஜாஜியின் அருகிலேயே சதா காலமும் இருந்து கொண்டு, அவருடன் கூட பல அரிய நூல்களைப் படிக்கக் கூடியதாய் இருந்த பாக்கியத்தைத்தான் குறிப்பிடுகிறேன். இன்னும் எத்தனையோ தேச பக்தர்களுடன் அளவளாவி மகிழ்வதற்குரிய சந்தர்ப்பந்தான் இலேசில் கிடைக்கக் கூடியதா?

ஆனாலும் விடுதலை நாள் நெருங்க நெருங்க மனத்தில் ஏன் அவ்வளவு பரபரப்பும் ஆவலும் ஏற்பட்டன? விடுதலைக்கு முதல் நாள் காலையில் கண் விழித்ததும், ''நாளைக்கு விடுதலை'' என்று எண்ணியபோது, நெஞ்சு ஏன் அப்படித் துள்ளிற்று... அன்றைக்கு ராத்திரி ஏன் தூக்கமே வரவில்லை? ''நாளைக்கு விடுதலை'', ''நாளைக்கு விடுதலை'' என்று மனது ஏன் ஜபித்துக் கொண்டே இருந்தது?

சிறையிலிருந்து தமது குடும்பத்தாருக்குப் பல கடிதங்கள் எழுதினார் கல்கி. அவற்றில் கடைசி மூன்று:

*மனைவிக்கு (18–3–41)*

சென்ற வாரம் குழந்தைகளுக்கு எழுதிய கடிதங்கள் கிடைத்திருக்கும்.

எனக்கு உடம்பு சுமாராய் இருக்கிறது. ராத்திரியில் இன்னும் மருந்து சாப்பிட வேண்டியிருக்கிறது. மருந்து சாப்பிடாவிட்டால் கொஞ்சம் இருமுகிறது. மற்றபடி சௌக்கியந்தான்.

வருஷப் பிறப்பு அன்றைக்கு ஊருக்கு வந்து விடலாம் என்று நினைக்கிறேன். இன்னும் 25 நாள்தானே இருக்கிறது? இதற்குள் நீங்கள் ஒரு தடவை எதற்காக அலைய வேண்டும்? வெயிலில் குழந்தைகள் கஷ்டப்பட்டுப் போவார்கள். அவசியம் வரவேண்டும் என்று தோன்றினால் வரவும். இல்லாவிட்டால் வரவேண்டாம். குழந்தைகளையும் கேட்கவும்...

ஊறுகாய் போதிய அளவு இருக்கிறது. இனிமேல் ஒன்றும் வேண்டாம். நெய்யும் வேண்டியதில்லை. மாகாளிக் கிழங்கு ராஜாஜி அண்ணாவுக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது. அவருக்கே ஜாடியுடன் கொடுத்துவிட்டேன்..

குழந்தைகளைப் பற்றி ஓயாத ஞாபகமாய் இருக்கிறது. அவர்களை நீ ஊரில் விட்டு விட்டுத் தனியாக வந்தது போலவும், அதற்காக உன்னை நான் கோபித்துக் கொண்டது போலவும் கனவு கண்டேன். சமர்த்தாய் இருக்கிறார்களா? குழந்தைகளின் சாதாரண விஷமங்களைப் பெரிதுபடுத்திக் கொண்டு, மனதைப் புண்ணாக்கிக் கொள்ளக் கூடாது. சில சமயம் அவர்கள் இஷ்டம் போலும் விட்டுப் பிடிக்க வேண்டும்.

*ராஜேந்திரனுக்கு (2–4–41)*

உன்னுடைய கடிதம் ரொம்ப வேடிக்கையாய் இருந்தது. அதைப் படிக்கும்போது சிரிப்புச் சிரிப்பாய் வந்தது. ஆனால் எழுத்து இன்னும் நன்றாய், குண்டு குண்டாய் எழுத வேண்டும்.

வீட்டில் ஏதாவது படிக்கிறாயா? இல்லையா? ''தம்பி! வா!'' புத்தகம் இருக்கிறதா? அல்லது கிழித்து ஓடம் பண்ணி விட்டு விட்டாயா?

கன்றுக்குட்டி புல்லைத் தின்றுவிட்டுத் துள்ளுகிறதா? அதற்கு உன்பேரில் அதிகம் பிரியமா? ஆனந்தியின் பேரில் அதிகப் பிரியமா?

*ஆனந்திக்கு (அதே தேதி)*

உன்னுடைய கடிதத்தையும் தம்பியின் கடிதத்தையும் தினம் ஒரு தடவை படித்து சந்தோஷப் படுகிறேன். உன் கையெழுத்து இப்போது ரொம்ப நன்றாயிருக்கிறது. இப்படியே திருத்தி அழகாய் எழுதிப் பழகிக் கொள்ள வேண்டும்.

நேற்று இங்கே கொஞ்சம் மழை பெய்தது. சிலபேர் மழையில் நின்று குளித்தார்கள். இந்த மாதிரி மழையில் நிற்பது உனக்குப் பிடிக்குமே என்பது ஞாபகம் வந்தது.

அடுத்த ஞாயிற்றுக் கிழமை — வருஷப் பிறப்பன்று — நான் அங்கே வருவேன்.

அவ்வாறே தமிழ்ப் புத்தாண்டு நன்னாளில் புத்தமங்கலத்தை அடைந்தார் கல்கி; ஆனந்தமாய்க் குடும்பத்தாருடன் பண்டிகை கொண்டாடினார்.

அந்தப் புத்தாண்டுடன் அவருடைய வாழ்க்கையிலே புதிய படலம் ஒன்று ஆரம்பமாயிற்று. சிறப்பாகவே அது அமைந்திடும் என்ற நம்பிக்கை, மனைவி மக்களுடன் அவர் சென்னைக்குத் திரும்புகையில் மனத்திலே பொங்கி எழுந்தது.

**முதல் பாகம் முற்றிற்று**

**பாரதி விழா புதுமை - 4**



குயில் பாட்டு பற்றிய விளக்க உரை நிகழ்த்திய அவ்வை திரு நடராஜன், அதில் உள்ள நகைச் சுவையான வரிகள் பலவற்றை எடுத்துரைத்துவிட்டு அதன் உட்பொருளுக்கு ஒரு விளக்கத்தையும் ஆய்வுக்கு வைத்தார்:

மனத்தை 'மனக் குரங்கு' என்றும் உடலை 'மாடு போன்றிருக்கிறான்' என்றும் உவமை கூறுவோம். எனவே தூய காதல் என்பது மனத்துக்கும் உடலுக்கும் அப்பாற்பட்ட தெய்வீகமான ஒன்று எனக் கருதலாம்.

# குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியத்துடன் திகழ 2 ஃபாஸ்ஃபோமின் டானிக்









## ஃபாஸ்ஃபோமின் அயன்

### பெண்களுக்கான அயன் டானிக்

ஃபாஸ்ஃபோமின் அயன் சத்துமிக்கச் சிவப்பு இரத்தம் உருவாகக் காரணமாயிருந்து உதவுவதுடன் உடலில் அயன் சத்தைச் சமநிலையில் பெற்றிருக்கவும் உதவுகிறது. இதில் பி காம்ப்ளெக்ஸ் விடமின்களும் பல்வேறு கிளிஸரோபாஸ்பேட்டுகளும் கூட அடங்கியுள்ளது. சக்தியும் ஆரோக்கியமும் பெற்றுத் திகழ உதவுவதுடன் களைப்பையும் விரட்டுகிறது. பெண்களுக்கென்று விசேஷ முறையில் உருவாக்கப்பட்டுள்ள முதல் டானிக்—ஃபாஸ்ஃபோமின் அயன்.



## ஃபாஸ்ஃபோமின் விடமின்

### குடும்பத்திற்கான விடமின் டானிக்

பழரச மணம் கமழும் சிறந்த டானிக். ஆரோக்கிய முழுமையோடு உணவு நிறைவைக் கூட்டுகிறது. உங்கள் குடும்பத்தினர் யாவரும் ஆரோக்கியத்துடன் சுறுசுறுப்பாய்த் திகழச் செய்ய, மிக அவசியமான பி காம்ப்ளெக்ஸ் விடமின்கள் மற்றும் பல்வேறு கிளிஸரோபாஸ்பேட்டுகள் அடங்கியது. குடும்பம் முழுவதும் அருந்தி ஆரோக்கியத்துடன் மகிழ—ஃபாஸ்ஃபோமின் விடமின்.

**ஃபாஸ்ஃபோமின் டானிக்குகள்—பசியைத் தூண்டி, வலிவு, நோயெதிர்ப்புச் சக்தி கூட்டுவன!**

TTT® SQUIBB® SARABHAI CHEMICALS LTD.

® இ.ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்ப்பரேடெட் அவர்களின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்குகளும், ஸாராபாய், இதை உபயோகிக்க உரிமை பெற்றுள்ளனர்.

Shilpi SC-44/76 tam

---

# அழுத பிள்ளையும் சிரிக்கும்!

குழந்தைகளுக்கு பயோ - ஸால் உடனடியாக அற்புத மாறுதல் உண்டாக்கும்! இல்லந்தோறும் வளரும் குழந்தைகளுக்கு ஜீரண சக்தியை ஊக்க அவசியமான நிவாரணி. நன்கு சோதிக்கப்பட்டு, பல்லாண்டுகளாக நம்பகமானது என்று புகழ் பெற்ற பயோ - ஸால் எல்லா குழந்தைகளுக்கும் உதவுகிறது

குதூகலமான ஆரோக்கியத்திற்கு பயோ-ஸால்







## பயோ-ஸால்®

### கிரைப் மிக்சர்



ஜே. & ஜே. டீஷேன்
லேபொரேட்டரீஸ் பிரைவேட் லிமிடெட்
ஹைதராபாத் - இந்தியா

# 9. டாக்டர் தேடுகிறார்!

மதுரபவனத்தில் பன்னிரண்டு தடவை மணி அடித்ததற்குச் சரியாகப் பத்து நிமிஷத்துக்கு முன்னால், அதே கட்டடத்தில், மாடியில் வேறோர் அறையில் ஒரு சின்ன நாடகம் நடைபெற்றது.

ரமேஷைப் போலவே இன்னொரு மனிதரும் திடுக்கிட்டு விழித்துக் கொண்டார். உதறிக் கொட்டிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தார். கண்களை மலங்க மலங்க விழித்து, ''ஐயோ, நானில்லை; நானில்லை!'' என்று குளறினார். சூழ்நிலையைப் புரிந்து கொள்ளவே அவருக்கு முழுசாக இரண்டு நிமிஷமாயிற்று. அது புரிந்தபோது —

''ரொம்ப நன்றாக இருக்கிறது. பச்சைக் குழந்தை மாதிரி காலையும் கையையும் உதறிக் கொண்டு....'' என்று முகவாயைத் தோள் பட்டையில் இடித்துக் கொண்டு மிஸஸ் பணிக்கர் எதிரே நின்று கோபத்துடன் பார்ப்பது தெரிந்தது. ''என்ன நானில்லை'' என்று அதட்டினாள் மிஸஸ் பணிக்கர்.

''எதற்கு அல்லது யாருக்கு இப்படிச் சொப்பனத்தில் கூடப் பயந்து சாகிறீர்கள்? சரி, சரி, எழுந்திருங்கள். என் டெர்ம் முடிந்து விட்டது. இனி மேல் உங்கள் டெர்ம்.... கண்ணைச் சுழட்டுகிறது. போய் ட்யூட்டியை ஆரம்பியுங்கள்.'' — மிஸஸ் பணிக்கர் அழகாக ஒரு கொட்டாவி விட்டாள்.

''இதோ கிளம்பிவிட்டேன்'' என்றார் டாக்டர். ''படுத்துக் கொள்; போர்த்தி விட்டுப் போகிறேன்..... பாவம், எப்படி இடுங்கிப் போய்விட்டது கண் — அரை நாள் தூக்கம் முழிப்பதற்குள்!''

''முழித்து என்ன பிரயோசனம்? ஒன்றுமே நடக்கவில்லை...... ஆசாமி ஜோராகத் தூங்கிக் கொண்டிருக்கிறார் — கவலையே இல்லாமல். பெண்டாட்டியைப் பறிகொடுத்த ஒருத்தன் இப்படியா நிம்மதியாகத் தூங்குவான்..... நாம் பயப்பட்டதெல்லாம் வீண்.... வீணாகத்தான் முறை வைத்துக் கொண்டு 'காவல்' காக்கிறோம் என்று தோன்றுகிறது......... மனுஷன் நிச்சயமாக ஏதும் செய்து கொண்டு விட மாட்டார்.....'' என்றவாறே படுக்கையில் படுத்துக் கொண்டு இன்னொரு கொட்டாவி விட்டாள் மிஸஸ் பணிக்கர்.

அவள் நெற்றியில் உதடுகளைப் பதித்து, 'குட் நைட்' சொல்லிவிட்டு, பட்டனைத் தட்டி விளக்கை அணைத்துவிட்டு வெளியே வந்தார் டாக்டர். தாழ்வாரத்தில் அரை நிமிஷம் நின்றார்.

குளிர்ந்த காற்று அவர் நெற்றியை வருடியது. கீழே அழகான பூங்காவும், அதற்கப்பால் ஆபீஸ் உபயோகத்துக்காகப் புதிதாகக் கட்டின, ஸ்கூல் மாதிரி வரிசையான அறைகளைக் கொண்ட இரண்டு மாடிக் கட்டடமும் தெரிந்தன. வாசல் கேட்டில் ஒளிர்ந்த நீல நிற மெர்க்குரியில் பூங்காவின் மருதாணி வேலிகள் கருஞ் சுவர் போல் காட்சியளித்தன. இரு கட்டடங்களையும் இணைத்த காரிடாரின் கூரையில் குடியிருந்த ஏதோ ஒரு பறவை படபட என்று சிறகுகளை ஓசைப்படுத்திற்று. அந்தக் காரிடாரும் புதுக் கட்டடத்தின் தாழ்வாரமும் சேரும் இடத்துக்கு அருகில் உள்ள நந்தியாவட்டைச் செடியில்தான் அந்த....

டாக்டரின் உடம்பெல்லாம் இனம் தெரியாத பரபரப்பில் சிலிர்த்தது. அது அங்கேயே அவன் வீசினது போலவே கிடக்குமா? இல்லை யார் கையிலாவது கிடைத்திருக்குமா? ஆகா! அது மட்டும் தம் கையில் கிடைத்துவிட்டால்!

தாழ்வாரம் இருண்டு கிடந்தது. மெதுவாக நடந்து சென்று கடைக்கோடி அறையை அடைந்தார். உள்ளே நைட் பல்ப் வெளிச்சத்தில் பெரிய கட்டிலில் கோவிந்து மல்லாந்து கிடப்பது தெரிந்தது. கோவிந்துவின் மார்பு ஒரே சீராக ஏறி இறங்குவதைக் கவனித்துக் கொண்டார்.

இடப் பக்கம் நாலடி தூரத்திலேயே கீழே செல்லும் சுழல் படிக்கட்டு இருந்தது. காலை வைத்தால் போதும்; ஒரே நிமிஷத்தில் கீழே கொண்டு போய் விட்டுவிடும். போகலாமா?

கோவிந்து எழுந்துவிட்டால் என்று பயமாகவும் இருந்தது. ஆனால் நன்றாகத் தூங்குகிறானா என்பதை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ள வேண்டும். தாழ்வாரத்தில் கிடந்த சோபா விளிம்பில் உட்கார்ந்து கொண்டார். கோட் பையில் 'டார்ச்' இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டார்.

தலை நிமிர்ந்த போது பேராச்சரியம் ஒன்று காத்திருந்தது. மேலே பார்த்துப் படுத்துக் கொண்டிருந்த கோவிந்துவின் முகம் இப்போது அறை வாயிலை நோக்கித் திரும்பியிருந்தது. அட, எப்போது திரும்பிப் படுத்துக் கொண்டார்? கோவிந்துவின் இமைகள் மூடியிருப்பதும் ஒரே சீராக மெல்லிய குறட்டை வந்ததும் சற்று நிம்மதியை அளித்தன. 'அடேயப்பா! பயந்தே போனோமே! தூக்கத்தில் புரண்டு படுத்துக்கொண்டிருக்கிறார்போல் இருக்கிறது!'

'தாமதியாதே, டாக்டர்! இதைவிடப் பொன்னான சந்தர்ப்பம் கிடைக்காது' என்று யாரோ உள்ளத்துள் விரட்டினார்கள். எழுந்து கொண்டார் டாக்டர். மெதுவாக அந்த அறையின் கதவை இழுத்து மூடினார். தாளிடவில்லை. பிறகு திரும்பிப் படிக்கட்டு வழியாக வேகமாகக் கீழே இறங்கினார்.

பாதி படிகளில் இறங்கும்போது, மேலே 'கிரீச்'சென்று ஏதோ சத்தம் கேட்டது போல் இருந்தது. திடுக்கிட்டு நின்று காது கொடுத்துக் கேட்டார். எங்கோ ஒரு கதவு மூடித் திறந்தது போலிருந்தது. 'கோவிந்துவின் அறைக் கதவாக இருக்குமோ' என்று ஒருகணம் நெஞ்சு அடித்துக் கொண்டது. பிறகு நிதானமாக யோசித்ததில் சத்தம் கீழே இருந்து வந்ததோ என்று தோன்றியது! சரிதான் சமையல்காரன் தண்ணீர் குடிக்க எழுந்து போய்விட்டு வந்து படுத்திருக்கலாம்!

''பயப்படாதே! உன்னை யாரும் பின் தொடரவில்லை. தைரியமாகப் போய்க் காரியத்தை முடி!' என்று தம்மையே விரட்டிக் கொண்டார். கடைசிப் படியில் கால் இலேசாக இடறியது. வானத்தின் மங்கிய வெளிச்சம் தாழ்வாரத்து வாசல் வழியாக வந்தது. மாடிப் படிகளின் அடியில் அடுக்கி யிருந்த கோழித் தீவனத்தின் நாற்றம் மூக்கைத் துளைத்தது.

வெளியே வந்து, இரட்டை அடுக்குக் காரிடாரின் கீழ் தளத்தில் நடந்து, எதிர்ப் பக்கம் கட்டடத்தின் தாழ்வாரத்தில் ஏற அரை நிமிஷம்கூடப் பிடிக்கவில்லை. தாழ்வாரத்தை ஒட்டிப் பள்ளிக்கூடம் போல் அறைகள் வரிசையாக இருந்தன. எதிர் அறைதான் கோவிந்துவின் அறை !

கோவிந்துவின் அறையில் இரவும் பகலும் ஒரு 'ஸீரோ வாட்ஸ்' எரியும். இப்போதும் எரிந்து கொண்டிருப்பது வெண்டி லேட்டரில் தெரிந்தது.

தாழ்வாரத்தில் நின்று ஒரு முறை நாலாபுறமும் நன்றாகப் பார்த்துக் கொண்டார், டாக்டர். எங்கும் மயான அமைதி நிலவியது. எதிர்ப்பக்கம் மதுரபவனத்தின் மாடி அறைகள் தெரிந்தன. அதோ, அதுதான் 'காமிரா' அறை. தாரிணி தேவிக்குப் போட்டோகிராபி பெரிய ஹாபி. வீட்டிலேயே அவள் பெரிய பெரிய 'லைட்டு'களுடன் ஒரு ஸ்டுடியோவே வைத் திருந்தாள். அதற்கடுத்தது, அவளுடைய பிரைவேட் அறை; அங்கேதான் அவள் இறந்து கிடந்தாள்; அதற்கடுத்து கோவிந்து இப்பொழுது படுத்திருக்கும் அறை.

மற்ற இரு அறைகளிலும் இருள் கவ்வி யிருந்தது; கோவிந்து படுத்திருக்கும் அறை ஜன்னல் திரையில் மட்டும் 'நைட் பல்ப்' ஒளி தூங்கி வழிந்து கொண் டிருந்தது.

தாரிணி இறந்து கிடந்த அறையிலிருந்து கண்ணா லேயே மானசிகமாக ஒரு நேர் கோடு இழுத்து இடத்தை நிர்ணயம் செய்து கொண்டார் டாக் டர். நினைத்தது சரிதான்! அதோ அந்த நந்தியாவட்டச் செடியின் கீழ்தான்....

திடீரென்று அவர் பின்னால் மின் னல் மின்னிய மாதிரி இருந் தது. திடுக்கிட்டுத் திரும்பினார். ஓர் அரை நிமிஷ



இடைவெளியில், கண் அறையின் வெண்டிலேட்டரில், 'பளிச், பளிச்'சென்று இரண்டு தடவை ஒரு பிரகாசமான டார்ச் வெளிச்சம் அடிபாய்ந்து விட்டு மறைந்தது. டாக்டர் சொல்ல முடியாத பீதியுடன் வெண்டிலேட்டரையே பார்த்துக் கொண்டு நின்றார். இதோ, இதோ, மறுபடியும் டார்ச் மின்னல்!

'ஓ, உள்ளே யாரோ இருக்கிறார்கள்! எனக்கு முன்னாலேயே வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள்! எதற்கு? நான் செய்யப் போவதை எதிர்பார்த்தா? என்னைக் கவனித்து வருகிறாரே?... அவனை இன்னாரென்று நான் புரிந்துகொண்டு விடுவேனோ என அஞ்சி என்னைத் தீர்த்துக் கட்ட இங்கே வந்து காத்துக் கொண்டிருக்கிறானோ? அப்படியானால் அவன் யார்?'

டாக்டரின் நெஞ்சு தடதடவென்று அடித்துக் கொண்டது. 'பையா! உன் ஜம்பம் என்னிடம் சாயாது! ஐயாவை என்னவென்று நினைத்துக் கொண்டாய்?' என்று மனத்துக்குள்ளேயே சொல்லித் தைரியப்படுத்திக் கொண்டார். 'உன்னை மாட்டி வைக்கும்' சாட்சியத்தைத் தேடித்தான் வந்தேன். இப்போது உன் மூஞ்சியையும் பார்க்கச் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. பார்த்துவிட்டுத்தான் போகிறேனே — '

அதிர்ஷ்டவசமாக, விசிட்டர்கள் வந்தால் உட்காருவதற்கென்று ஒரு பெஞ்சு வெண்டிலேட்டரின் அடியில் கிடந்தது. அதன் மீது சத்தமின்றி ஏறி, படபடக்கும் உள்ளத்துடன் உள்ளே பார்த்தார்! அடுத்த கணம் அவருக்குத் தூக்கிவாரிப் போட்டது! அவர் எதிர்பார்த்த ஆள் அங்கே இல்லை! ரமேஷ்தான் ஒரு ஸ்டூல் மீது ஏறி நின்று கொண்டு, சுவரோரமாக இருந்த ஆறடி உயர மர பீரோ ஒன்றின் மீது கையால் துழாவிக் கொண்டிருப்பது தெரிந்தது!

'ஓ, ரமேஷ் பையன்! இவன் எதற்கு இங்கே வந்தான்? என்னத்தைத் தேடிக் கொண்டிருக்கிறான்?' —

ரமேஷின் முகம் திடீரென்று பிரகாசம் அடைந்தது. 'ஆகா!' என்று அவன் ஓங்கிய குரலில் கூவினது டாக்டருக்கு நன்றாகக் கேட்டது. அவன் தேடினது கிடைத்துவிட்டது போலிருக்கிறது!

அடுத்த கணம் அது என்ன பொருள் என்பதும் டாக்டருக்குத் தெரிந்தது. ரமேஷ் தன் கையில் கிடைத்த பண்டத்தை நன்றாக விளக்கு வெளிச்சத்தில் தூக்கிப் பிடித்தான். மங்கிய ஒளியேயாயினும் அது என்ன என்பது நன்றாகத் தெரிந்தது! அது விமலாவின் ஹாண்ட் பாக்தான்!

**வி**மலாவையே தேடிக் கண்டு பிடித்துவிட்டது போலிருந்தது ரமேஷுக்கு. கண்களில் நீர் மூட்டியது. பையை மார்போடு அணைத்துக் கொண்டு ஒரு நிமிஷம் பாசத்தால் கேவினான்.

அடுத்த நிமிஷம் இருக்கும் சூழ்நிலை நினைவு வந்துவிட்டது. ஸ்டூலிலிருந்து கீழே குதித்து மேஜையருகே வந்து பையை அவசர அவசரமாகத் திறந்தான். அவன் விரல்கள் உள்ளே போய் துழாவிவிட்டு வெளியே வந்தபோது அதில் ஒரு சின்னஞ் சிறு 'காஸெட்' இருந்தது! சேகர்! நீ கொண்டு வரச் சொன்ன 'காஸெட்' இதோ கிடைத்துவிட்டது!

திடீரென்று வெளியே 'தொப்'பென்று சத்தம் கேட்டது. ஏதோ ஒரு பெஞ்சு ஆடி அமர்ந்தது போன்ற ஓசை! ரமேஷ், 'காஸெட்'டை சட்டைப் பையில் போட்டுக் கொண்டு, ஹாண்ட் பாக்கை அங்கிருந்த வாரே பீரோ மீது வீசி எறிந்துவிட்டு, 'சட்'டென்று மேஜையடியில் பதுங்கிக் கொண்டான்

அவன் ஒளிந்திருந்த இடத்திலிருந்து பார்த்த போது சுவரில் அந்த இரு மோகன விழிகளும் மிக நன்றாகத் தெரிந்தன.

யாருடைய விழிகள் இவை? நிஜமாகவே இப்பேர்ப்பட்ட அசாதாரண எழிலுடன் ஒருத்திக்கு விழிகளும் புருவங்களும் இருந்தனவா? நிஜத்தில் அவள் எப்பேர்ப்பட்ட நிகரற்ற சௌந்தர்யவதியாக இருந்திருக்க வேண்டும்?

கதவு திறக்கப்படுகிறது: 'கோவிந்துவோ யாரோ உள்ளே வரப் போகிறார்கள்' என்று அவன் எதிர்பார்த்தான். ஆனால் முழுசாக ஐந்து நிமிஷ நரமாகியும் அப்படி யாரும் வரவில்லை. 'சீச்சீ! எல்லாம் வெறும் பிரமை' என்று முனகிக் கொண்டே வெளியே வந்தான்.

கதவை மூடிப் பூட்டிலே சாவியைத் திருப்பிவிட்டு அவன் திரும்பிய போது அவனுக்கு ஒரு பெரிய ஆச்சரியம் காத்திருந்தது. அவன் கண்ணெதிரே விநாடிப் போதில் சினிமாவில் வருவது போன்று ஒரு காட்சியே நடந்துவிட்டது!

சற்றுத் தூரத்தில் ஒரு பெரிய நந்தியாவட்டைச் செடியடியில் யாரோ குனிந்து எதையோ தேடுவது முதலில் நிழற் படம் மாதிரி தெரிந்தது!

அடுத்த கணம் அந்த நிழற்படம் முழுவதும் ஒளிமயமாயிற்று. எதிர் மாடியில் 'சட்'டென்று திறந்து கொண்ட காமிரா அறை ஜன்னல் வழியாக ஒரு பெரிய ஸ்டுடியோ விளக்கின் கண்ணைப் பறிக்கும் வெளிச்சம் செடி மீது விழுந்தது.

அதற்கடுத்த கணம் செடியடியில் குனிந்திருந்த உருவம் நிமிர்ந்து நின்று ஒளிக் கற்றைகளின் 'கூச்சம்' தாள முடியாமல் தள்ளாடித் தடுமாறியது. கைகளால் வெளிச்சத்தை மறைக்க முயன்றது.

அதற்கடுத்த கணமோ, அந்த உருவம் நின்ற இடத்துக்கு நேர் மேலே கொல்லத்து வேலை செய்வதற்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்த செங்கற் குவியல் ஒன்று நிலை பெயர்ந்து அந்த உருவத்தின் மீது சரியலாயிற்று!

''ஓ, டாக்டர் — டாக்டர்!'' என்று கூவிக் கொண்டு ரமேஷ் மின்னல் வேகத்தில் அவரை நோக்கி ஓடினான். (தொடரும்)

---

**விசன வாக்கியம்!**



''கல்யாணம்' என்ற வார்த்தையின் அர்த்தம் என்ன?'' பையன் அப்பாவிடம் கேட்டான்.

''வார்த்தையா அது?'' அப்பா பெருமூச்சு விட்டார். ''முடிவில்லாத வாக்கியம்...''

- எம். எஸ்.

"நான்
டியாராவிற்கு
மாறிவிட்டேன்"

என்கிறார் பம்பாயின்
அழகு ராணி
குமாரி
சித்ரா சுந்தரம்

"...டியாரா
டால்க்கின்
தனிச் சிறப்பு
வாய்ந்த
இனிய மலரின்
நறுமணம்
என்னைப் பெரிதும்
கவர்கிறது"







ஹெலன் கர்ட்டிஸ்
வழங்கும்
டியாரா
ப்யூட்டி டால்க்

ARMS-HC-18-140 TAM

# காதல் போர்

—ரா. ஸ்ரீநாதன்—



### சீதல்

ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணம் என்னும் வசனம் உண்மையோ, பொய்யோ, எனக்குத் தெரியாது. நான் ஒரு பொய் சொல்லப் போய் அது பலபலவாக வளர்ந்து காதல் வரை கொண்டு விட்டது. அது கல்யாணமாக முடிவதற்குள்தான் எத்தனை சோதனைகள்! ஸ்ரீநகருக்கு விமானத்தில் புறப்பட்ட என் பக்கத்துஆசனத்தில் ஓர் ஆணழகன் அமர்ந்திருந்தான். அவன் பார்த்தும் பார்க்காதது போல என்னைப் பார்த்த பார்வை! அப்பப்பா! அவன் கண்கள்தான் எப்படித் துறுதுறுத்தன!

"என்ன அழகு, என்ன அழகு!" என்று என் காது கேட்க அவன் முணு முணுக்கவே, நான் முறைத்தேன். "நான் உங்களைச் சொல்லவில்லை. இந்த இயற்கை அழகைச் சொன்னேன். நீங்களும் வேண்டுமானால் பாருங்களேன்!" என்னை அவன் இழுத்துக் காட்டாத குறைதான்.

"அறிமுகமில்லாதவர்களுடன் நான் பேசுவதில்லை!" குரலில் கடுமையை வரவழைத்துக் கொண்டு நான் கூறினேன்.

"அதற்கென்ன, அறிமுகம்செய்துகொண்டு விட்டால் போகிறது! என் பெயர் சுநீல். நான் லெப்டினென்ட் நாயக்காக உத்தியோகம் பார்க்கிறேன். உத்தியோக நிமித்தம் ஸ்ரீநகருக்குப் போகிறேன்! இனி பேசலாம் அல்லவா?" என்றான் அவன்.

"இதோ பாருங்கள், மிஸ்டர்! நீங்கள் யாரோ, நான் யாரோ? இதுவே நம் முதல் சந்திப்பாகவும் இருக்கலாம், கடைசிச் சந்திப்பாகவும் இருக்கலாம். ஷட் அப்!" என்று முத்தாய்ப்பு வைத்தேன்.

சீதோஷ்ண நிலை காரணமாக விமானம் ஜம்முவில் இறங்கி விட்டது. எனக்குத் திக்கென்றுவி விட்டது. ஸ்ரீநகருக்கு டாக்ஸி கேட்டால் டாக்ஸியையே விலை பேசுகிறாற் போலக் கட்டணம் கேட்டார்கள் டிரைவர்கள். சுநீல் ஒரு டாக்ஸியைப் பேசிக் கொண்டிருந்தார். 'இதுவே கடைசிச் சந்திப்பாகவும் இருக்கலாம்' என்று வாய்த்துடுக்கோடு சொன்ன நானே அவரிடம் வலியச் சென்று, "ஆளுக்கு 'ஃபிஃப்டி, ஃபிஃப்டி' கொடுத்துக் கொண்டு போய்விடலாமே!" என்றேன்.

"அறிமுகம் இல்லாதவர்களுடன் நான் பேசுவதில்லை!" நான் வாசித்த பாடத்தையே அவர் திருப்பி வாசித்தார்.




"என் பெயர் சீதல். என் அப்பாவுக்கு உடல்நிலை சரியில்லை. நான் சீக்கிரம் போயாக வேண்டும்., ப்ளீஸ்!" நான் கெஞ்சாக் குறைதான்.

"போனால் போவுது, சார்! 'லிஃப்ட்' கொடுங்க, சார்!" என்று சொல்லி டிரைவரே சிபாரிசு செய்தார்.

"சரி, இதுவே கடைசிச் சந்திப்பு!" என்று கூறி சுநீல் எனக்கு இடம் கொடுத்தார்.

இருட்டி விடவே, டிரைவர் டாக்ஸியை நிறுத்திவிட்டு, ''இன்று இரவை இங்கேயே எங்கேயாவது விடுதியில் போக்குங்கள். இனி நாளைக் காலையில் நம் பயணம் தொடங்கும்!'' என்றார்.

''ஐயையோ! என் அம்மாவுக்கு ரொம்ப உடம்பு சரியில்லையே! நான் உடனே போயாக வேண்டுமே!'' என்று நான் பரபரத்தேன்.

''இந்த இருட்டு வேளையிலே வளைந்து வளைந்து செல்லும் பாதையிலே ஓட்டிக் கொண்டு போய் விழுந்து வைத்தால் நம் மூன்று பேருடைய உயிரும் போவது ஒருபுற மிருக்கட்டும், என்னை நம்பியிருக்கும் குழந்தை குட்டிகள், பெண்டாட்டி ஆகியவர்களின் கதி என்ன ஆவது? அவர்கள் என்னை நம்பி வாழ்கிறார்கள். அவர்கள் நம்பிக்கையைக் கொல்ல நான் ஆள் இல்லை!'' என்று தீர் மானமாக மறுத்து விட்டார் டிரைவர்.

''அட, தலையெழுத்தே!'' என்று இரண்டு அறைகள் வாடகைக்கு எடுப்போம் என்று போனால் ஒரே ஒரு அறைதான் காலியாக இருந்தது. 'அட கிரகச்சாரமே! அங்கே குழந்தைகளுக்கு உடம்பு சரியில்லையே! என்ன செய்வேன்!'' என்று முணுமுணுத்தேன்.

''குழந்தைகளுக்கா? யார் குழந்தைகள்?''

''என் குழந்தைகள்தான்!''

''உங்கள் குழந்தைகளா?'' என்னை ஏற இறங்கப் பார்த்தார் சுநீல்.

''ஏன், இருக்கக் கூடாதா? எனக்கு மூன்று குழந்தைகள். ஓர் ஆண், இரண்டு பெண்கள்.''

''அப்போ உங்களுக்குக் கல்யாணம்...?''

''கேள்வியைப் பார், கேள்வியை!'' சீறி னேன்.

அப்பொழுது பக்கத்து அறையில் குழந்தை ஒன்று வீறிட்டது. அது கையில் அகப்படா மல் அழத் தொடங்கவே, சுநீல் விருட் டென்று வெளியே போனார்.

''என்ன மனுஷன், ஐயா நீர்? குழந்தையை இப்படியா அழ விடுவது? இப்படிக் கொடும், குழந்தையை! இதோ ஒரு நிமிஷத்தில் குழந் தையைச் சமாதானம் செய்து அழுகையை நிறுத்தச் செய்கிறேன்!'' என்று கூறிக் குழந் தையை வாங்கிக் கொண்டு என்னிடம் வந்து விட்டார். ''இந்தாருங்கள், இதைச் சமா தானம் செய்து அழுகையை நிறுத்துங்கள்!'' என்றார்.

எனக்கோ தர்ம சங்கடம்! ''குழந்தையை வளர்த்து எனக்குப் பழக்கம் இல்லையே! இதன் அழுகையை எப்படி நிறுத்துவது?'' என்று அவரையே கேட்டேன்.

''மூன்று குழந்தைகள் பெற்றவளுக்கு இது கூடத் தெரியாதா? பாலைக் கிலைக் கொடுத் துக் குழந்தையைச் சமாதானம் செய்யுங்கள்'' என்றார் அவர்.

நான் கட்டெரித்து விடுபவள் போல் அவ ரைப் பார்த்தேன். ''உண்மையைச் சொல்லி விடுகிறேன். நான் கன்னிப் பெண். எனக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை!''

''அப்படி வா, வழிக்கு! நானும் கட்டைப் பிரம்மச்சாரி. எனக்கும் கல்யாணம் ஆக வில்லை!'' என்றார் அவர்.

குழந்தை அழுகையை நிறுத்திவிட்டு எங்கள் இருவரையும் மாறி மாறிப் பார்த்தது.

'போக்கிரிப் பயலே!' என்று செல்லமாகக் கடிந்து கொண்டு உரியவரிடம் சேர்ப்பித்து வந்தார். பிறகு தம் படுக்கையை எடுத்துக் கொண்டு வெளியே புறப்பட்டார்.

''எங்கே போகிறீர்கள்?''

''படுக்க. நீ பயமில்லாமல் இந்த அறை யில் படுத்து உறங்கு. இந்தக் கட்டையைச் சாய்க்க வெளியே பெரிய வராந்தா இருக் கிறது!''

''குலை நடுக்கும் இந்தக் குளிரிலா?''

''ஆமாம், வேறு வழி? நீ மூன்று குழந்தை களுக்குத் தாயாக இருந்தால், நான் தைரிய



வெயில் என்றும் காய முடியவில்லை; மழை யென்றும் நனைய முடியவில்லை. இந்த மூதுரையைப் பின்பற்றி இந்தப் படத்தை ஒரு முழு போர்ப்படமாகவும் கூற முடியவில்லை; முக்கோணக் காதல் சித்திரமாகவும் கொள்ள முடியவில்லை. எப்படியோ தொடங்கி எப்படியோ முடித்த பெருமை ஜே. ஓம்பிரகாஷைச் சாரும். சஞ்சீவ் குமார் தாம் ஏற்ற பாத்திரத்துக்கு நியாயம் வழங்குகிறார். ராகேஷ் ரோஷன் கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதையை நினைவுபடுத்துகிறார். அசோக்குமாருக்கு இத்தகைய நடிப்பு புதிதில்லை. ரேகாவுக்குக் கண் சொட்டப் பொழுதிருக்கிறதே தவிர, நடிக்கப் பொழுதில்லை.

இசையும் பாடலும் 'ஏனோ, தானோ' தான். புறப் போர்க் காட்சிகளைக் காமிரா நன்கு படமாக்கி யிருக்கிறது. போர்ப் படம் 'போர்' அடிக்காத இடம் என்றாலும் 'போர்' அடிக்கும் இடங்களும் பல உண்டு. **ஆக்ரமண்** என்னும் சொல்லுக்குத் தாக்குதல் அல்லது படையெடுப்பு என்று பொருள். படம் முழுவதும் **ஃபார்முலா** தாக்கிப் படையெடுத்திருக்கிறது.

---

மாக இந்த அறையில் ஒரு மூலையில் படுத்திருப்பேன். ஆனால் நீயோ கன்னி. நானும் கல்யாணம் ஆகாதவன். அப்புறம் ஊர் உலகம் என்ன சொல்லும்? அம்மம்மா! எனக்குப் பயமாக இருக்கிறது!'' அவர் குறும்புச் சிரிப்பு என்னைக் கொள்ளை கொண்டது.

கண்டதும் காதல் என்பது இதுதானோ?— நான் பாடி மகிழாத குறைதான்!

## சுனில்

சந்தேகம் இல்லை. காதல் என்பது இதுதான். எந்தத் தாக்குதலையும் தாங்கிவிடலாம். இந்த விழித் தாக்குதலை மட்டும் தாங்கமுடியாது. காந்த சக்தியுள்ள கண்கள், பார்வை என்னும் அம்பை வீசினால் மனிதன் எப்படி அலைமலைந்து போகிறான்? உயிரைக் குடிப்பது வீரப் போர். உயிரைக் குடித்தும் உயிரைத் தருவது காதல் போர். உண்மையில் சீதல் எனக்கு உயிர் அளித்து விட்டாள். அவள் உருவம் என் மனத்தில் பதிந்துவிட்டது. அவளை மணந்து அவள் பொய்யாகப் பெற்றெடுத்த மூனு குழந்தைகளுக்கு நிஜமாகவே தந்தையாவேன். அந்த நாள் தொலைவில் இல்லை என்று நான் இறுமாந்திருந்த வேளையிலே.....

''இதோ பாருங்கள், இதுவே நம் கடைசிச் சந்திப்பு! என்னை மறந்து விடுங்கள். ஆம், நிஜமாக, நிச்சயமாக மறந்துவிடுங்கள்!'' என்று விழிகளில் கலம் நீர் தேங்கக் கூறினாள் சீதல்.

''ஏன், ஏன்? என்ன சொல்கிறாய் நீ?''

''என் சித்தப்பா எனக்கு வேறு இடத்தில் திருமணம் நிச்சயம் செய்து விட்டார். அவரை மீறி நான் எதுவும் செய்ய இயலாது. என் சித்தப்பாவுக்கு ஒரு மகன் இருந்தான். அவனும் உங்களைப் போல் ராணுவத்தில் பணியாற்றி வந்தான். சித்தப்பா அவனைச் சுற்றி எத்தனையோ ஆசைக் கோட்டைகள் கட்டி வைத்திருந்தார். அவன் பதவி உயர்ந்து மேஜராகப் போவதாகக் கனவு கண்டார். ஆனால் அவர் கனவை அழித்து விட்டு அவன் போரில் மாண்டு போனான். மேஜராகாமல் அவன் மரித்துப் போனானே என்று அவருக்கு அபாரத் துயரம். தாய் தந்தையற்ற என்னைத் தம் பெண்ணைக் காட்டிலும் பெருமையாக வளர்த்தார். தன் மகன் மேஜராகாத குறையை என் மூலம் போக்கிக் கொள்ள முயன்று என்னை ஒரு மேஜருக்கு மணம் முடிக்க முடிவெடுத்திருக்கிறார். அவர் புண்பட்ட உள்ளத்தை நான் மேலும் புண்படுத்த விரும்பவில்லை. அவரது ஆசையை நிறைவேற்றுவது என் கடமை என்பதால் நான் மௌனச் சம்மதம் அளித்து விட்டேன்!''

சீதல் இப்படிக் கூறிவிடவே, எனக்கு வாழ்க்கை வெறிச்சோடியது. வேம்பாகக் கசந்தது. போதையில் என்னை மறக்க முயன்றேன். ஆனால் சீதலைத்தான் என்னால் மறக்க முடியவில்லை.

எங்கள் அணிக்குப் புதிதாகப் பதவி ஏற்று வந்த மேஜர் அஜய வர்மாவுக்கு அன்று நாங்கள் ஒரு பார்ட்டி கொடுத்தோம். என்னைப் பாடச் சொன்னார்கள். என் கனவாகி விட்ட காதலை நினைத்துப் பாடினேன். சீதலும் அவ்விருந்துக்கு வந்திருந்தாள். நான் துடிக்கத் துடிக்கப் பாடிய பாடலைக் கேட்டு அவள் உள்ளமும் துடித்துத்தான் போயிருக்க வேண்டும். மேஜர் அஜய வர்மாவுக்கு என் பாடலை மட்டுமின்றி என்னையும் பிடித்துப் போய் விட்டது. என்னைத் தனிமையில் சந்திக்க நேர்ந்தபொழுது, ''உன் ஏக்கம் புரிகிறது. உன் காதலியையும் அழைத்து வருவதற்கென்ன? எனக்குச் சிரித்து மகிழ்பவர்களைக் கண்டால்தான் பிடிக்கும்!' என்று வெள்ளை உள்ளத்தோடு கூறினார்.

என் காதல் தோல்வியை அவரிடம் எப்படிக் கூறுவேன்? மனம் குமைந்ததுதான் மிச்சம்!

இந்த மனக் குமைச்சலை முறியடிப்பது எப்படி என்று யோசித்த வேளையில் பாகிஸ்தானியர்கள் எல்லைப் பகுதியிலே குண்டைப் போட்டனர். மேஜர் அஜய வர்மாவின் தலைமையில் எங்கள் அணி போர்முனைக்கு விரைந்து சிறப்புப் பணி புரிந்தது.

அன்று மேஜர் வர்மா இரண்டு கடிதங்களை என்னிடம் கொடுத்து எவனையாவது அனுப்பித் தபாலில் சேர்க்கச் சொன்னார்.

நானே சேர்த்து விடுவதாகக் கூறி வாங்கி வந்தவன் முகவரியைப் பார்த்தேன். ஒரு கடிதம் அவர் தாயாருக்கு எழுதப்பட்டிருந்தது. இன்னொன்று சீதலுக்கு. ஆவல் உந்தவே சீதலின் கடிதத்தைப் பிரித்துப் படித்து விட்டேன். சீதலை மணக்கப் போகிறவர் மேஜர் அஜயவர்மாதான் என்பது தெரிய வரவே, என் காதலுக்குக் குறுக்கே நிற்கும் அவர் மீது எனக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது. கடிதத்தைச் சுக்கு நூறாகக் கிழித்துப் போட்டேன்.

'சீதல்! என்னால் என் காதலைக் கொல்ல முடியவில்லை. உன் காதலைக் கொன்று உன்னை

மக்கள் திலகத்தின்
மாபெரும் வெற்றிச் சித்திரம்

**சத்தியம்**
70 M.M. A/C
**மகாராணி**
**உமா**
**கமலா**
மற்றும் தென்னகமெங்கும்



சத்யா மூவீஸின்

# இதயக்கனி

ஈஸ்ட்மென்கலர்

திரைக்கதை-தயாரிப்பு: R.M. வீரப்பன் டைரக்ஷன்: A. ஜகந்நாதன்

ஒலிப்பதிவு: ப. பாலகிருஷ்ணன் B.A. இசை: M.S. விஸ்வநாதன்

மணம் முடிக்கத் திட்டமிட்டிருப்பவனைத் தீர்த்துக் கட்டுவது என் கையில் இருக்கிறது. அவனைக் கொலை செய்து விட்டால் நம் பாதை சரியாகி விடாதா?' என்று என் கண் முன் கனவுப் பதுமையாக நின்ற சீதலைக் கேட்டேன்.

'காதல் நிறைவேற உயிர்ப் பலியா? வேண்டாம், வேண்டாம்! போர்க் களத்தில் மனிதன் மனிதனது உயிரை மாய்த்துக்கொள்ளும் கண்ணராவி ஒன்று போதும். காதல் களத்தைப் போர்க்களமாக்கி விடாதீர்கள்!' என்றாள் அவள்.

அவள் சொல்லில் பொதிந்திருந்த பொருளை உணர்ந்தபொழுது என் கை தாழ்ந்தது. பெரும் பழியிலிருந்து தப்பினேன்.

''சுநீல், இன்று உன் வீரத்துக்குச் சோதனை! நீ எதிரிகளின் டாங்குகளைத் தகர்த்தெறிந்து திரும்ப வேண்டும்!'' என்று ஆணையிட்டார் மேஜர்.

அவர் ஆணையைச் சிரமேற்கொண்டு வெற்றி கண்டேன். ஆனால் எதிரிகளின் குண்டு என்னைப் பதம் பார்த்து விட்டது. மூர்ச்சையாகிப் போனேன்.

## அஜய்

சுநீல் எதிரிகளை அயர வைத்து விட்டான். அவனுடைய போர்த்திறம் போற்றத் தக்கது. எதிரிகளின் குண்டுக்கு இலக்காகி இப்படி மூர்ச்சையாகிப் போனானே, அவன் உயிருக்கே ஆபத்து வந்து விடுமோ? அவனைத் தூக்கி வர நான் ஓடினேன். அவன் பையிலிருந்து ஒரு புகைப் படம் தலைநீட்டியது. எடுத்துப் பார்த்தால் என் சீதலின் படம்! அவள் கையெழுத்திட்டு அவனுக்கு அதை அன்புப் பரிசாக வழங்கி யிருந்தாள். அப்படியானால் என் காதல் ஒருதலைக் காதல்தானா? சீதல் என்னைக் காதலிக்கவில்லையா? இவர்கள் தன் உண்மைக் காதலை என்னிடம் ஒளிவு மறைவின்றி ஏன் சொல்லியிருக்கக் கூடாது? நான் என்ன அவ்வளவு வஞ்ச நெஞ்சம் படைத்தவனா? இவர்களது காதலுக்குக் குறுக்கே நிற்க? விவரம் தெரிந்திருந்தால் நானே முன்னின்று இவர்கள் திருமணத்-தை ஜாம் ஜாமென்று நடத்தி வைத்திருப்பேனே!

'ஆண்டவனே! சுநீலின் உயிருக்கு ஆபத்து நேரக் கூடாது. எப்படியாவது காப்பாற்று. இவனுக்கும் சீதலுக்கும் மணம் முடித்து வைத்துவிட்டு மறு காரியம் பார்க்கிறேன்.'

சிகிச்சை பயனளித்தது. சுநீல் மூர்ச்சை தெளிந்தபொழுது என் கைகளைப் பற்றிக் கொண்டு கூறினான்: ''மேஜர்! என்னை மன்னித்துவிடுங்கள்! சீதலுக்கு நீங்கள் எழுதிய கடிதத்தைப் பொறாமையினால் நான் கிழித்துப் போட்டு விட்டேன். அவளை நான் காதலித்தேன். நீங்கள் அவளை மணப்பது பொறுக்காததால் அப்படிச் செய்து விட்டேன்!''

''அட, அசடே! ஒன்றிய உள்ளங்களுக்கிடையே குறுக்கிடு தோன்றினால் இப்படியெல்லாம் செய்யத் தோன்றும். இது இயல்பு; நீ செய்தது சரி!''

''நான் செய்தது சரியா? மேஜர்! உங்கள் பெருந்தன்மை உங்களை அப்படிப் பேச வைக்கிறது. நீங்கள் சீதலை மணந்து இன்பமாக வாழுங்கள்!'' என்றான் சுநீல்.

'அசட்டுப் பயல்! அவனுக்கு வாழ்த்த ஏது உரிமை! நான் அல்லவோ மேஜர்? நான் அல்லவோ வாழ்த்த வேண்டும்?'

முதலில் இவன் உடல் நிலையைத் தேற வைத்து இவனை ஊருக்கு அனுப்பி வைக்க வேண்டும். சீதலுக்கு ஒரு கடிதம் எழுதி, — ஊஹூம், — அதை இவன் கையில் தபாலில் சேர்க்கக் கொடுக்கக் கூடாது. அதையும் இந்தப் பயல் கிழித்துப் போட்டு விடுவான். மேஜரே சீதலை மணந்து கொள்ளட்டும் என்ற நினைப்பில்! இந்தப் பயல் தலையில்தான் சீதலைக் கட்ட வேண்டும். அதற்கு மேஜரே தான் தபாலைத் தபாலில் சேர்க்க வேண்டும்!—

இப்படி முடிவு செய்து கொண்டு சீதலுக்குக் கடிதம் எழுதினேன்.

'சீதல்! உன் உள்ளத்தைப் புரிந்து கொண்டேன். உண்மைக் காதலுக்கு ஒளிவு மறைவு எதற்கு? நீ உன் மனத்தைத் திறந்து காட்டியிருந்தால் நான் ஒரு நாளும் குறுக்கே வந்திருக்க மாட்டேன். நீ விரும்பிய மணாளனையே மணந்து இன்புற்று வாழ்வாயாக. உண்மைக் காதல் ஒருநாளும் தோல்வியுறுவதில்லை!'

எனது கடிதத்தை அங்கு சீதல் படித்து மகிழ்ந்து கொண்டிருப்பாள். இங்கே நான் பாரதத்தின் வெற்றியைக் கொண்டாடக் கொடியேற்றி மகிழ்ந்தேன்.

பட்டொளி வீட்டுப் பறந்த கொடி இங்கு படபடத்தது. 'வெற்றி, வெற்றி! பாரதத்துக்கு வெற்றி!' என்று வெற்றி முழக்கமிட்டேன். மனக் கண்ணோ சீதலக் கொடி தன் காதல் வெற்றியைக் கொண்டாடுவதைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருந்தது.

அப்பொழுது எவனோ ஒரு புல்லன் எங்கோ மறைந்திருந்து என்னைச் சுட்டு விட்டான்! அந்தப் பாவிக்கு எனது இரட்டை மகிழ்ச்சி பொறுக்கவில்லை போலும்!

ஜெய் ஹிந்த்!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



''நீங்கள் டிக்டேட் பண்ணியபடி டைப் செய்திட்டேன்.''

''உம்... படி!''

''அன்புடையீர்! வணக்கம். நீங்கள் அனுப்பிய ... ஹே, பியூன்! வெளியே என்ன சத்தம்? .... இன் வாய்ஸ் பத்திரமாக .... சைலேன்ஸ்! ... வந்து சேர்ந்தது...நன்றி...''

# இராமன் இருக்குமிடம்...



— எஸ். லட்சுமி சுப்பிரமணியம் —

**போட்டிக்கதை : 4**

நீலா சமையலறையில் ஏதோ வேலையாக இருந்தாள். தபால்காரன் குரல் கொடுத்ததும் கையைத் தலைப்பில் துடைத்துக்கொண்டு வெளியே வந்தாள்.

அது ஒரு ரிஜிஸ்தர் கடிதம். தில்லியிலிருந்து வந்திருந்தது. கையெழுத்தைப் பார்த்ததுமே அது ரமேஷிடமிருந்துதான் வந்திருக்கிறது என்று புரிந்து விட்டது. கையெழுத்துப் போட்டு வாங்கி மேஜையின் மேல் வைத்தாள். பிரிக்க மனமில்லை.

சொல்லப் போனால் பிரிக்கத் துணிவும் இல்லை. உள்ளே அடுப்பில் கொதி வந்த சத்தம் கேட்டது. அவள் மனத்திலும் என்னென்னவோ எண்ணங்கள் எழும்பிக் குழம்பிக்கொண்டிருந்தன. மேலே சமையலில் ஈடுபட மனம் மறுத்தது. 'காஸ்' அடுப்பை மூட்டிவிட்டு வந்து நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள்.

சற்றுக் கனமான அந்தக் கடித உறையைக் கையில் எடுத்துத் திருப்பித் திருப்பிப் பார்த்தாள். விளக்கொளியில் மின்னும் மூக்குத்தியைப் போல், ஒவ்வொரு தடவை அந்த எழுத்துக்களைப் பார்த்ததும் மனத்தில் எண்ணங்கள் மின்னல் கிளை பிரிந்தன.

அவ்வளவு பெரிய கடிதம் ஒன்று. அவன் தில்லிக்குப் போய்ச் சேர்ந்த இரண்டாவது நாள் அவளுக்கு வரவேண்டிய அவசியம் இல்லை. அது ஒரு நீளமான கடிதமாகத்தான் இருக்க வேண்டும். அவள் பயந்தது நடந்து விட்டது. தலைமுதல் கால்வரை ஒருமுறை நடுங்கிற்று. குளிரில் நனைந்துவிட்ட பூனைக் குட்டியைப் போல் சோபாவில் சுருண்டு படுத்துக்கொண்டாள். மனம் ஒரு வசப்படாமல் அலைந்தது.

அவர்கள் இருவரும் அவளுடைய தோழி சுஜாதாவின் கல்யாணத்துக்குப் போயிருந்தார்கள். அப்போது அவர்களிடையே இருந்த உறவு கனிந்து கொண்டிருந்த நட்புதான். உரிமை எதுவும் இன்னும் வேர் ஊன்றவில்லை.

''சுஜாதாவுக்கேற்ற கணவர்தான் ரவி. இரண்டுபேரும் நன்றாகப் படித்திருக்கிறார்கள். இருவரும் நல்ல வேலையில் இருக்கிறார்கள். இருவருக்குமே சிந்தனை, மனப் போக்கு, எல்லாம் ஒரே மாதிரி இருக்கின்றன. இதைப் போல் ஒரு நல்ல, பொருத்தமான ஜோடி அமைய முடியாது. என்ன சொல்கிறீர்கள்?''

''இருக்கலாம். ஆனால் சுஜாதா வேலைக்குப் போவது எனக்குப் பிடிக்கவில்லை!'' என்றான்.

''ஏன்? இதில் என்ன சங்கடம்? இருவரும் சம்பாதித்தால் கொஞ்சம் சௌகரியமாக இருக்கலாமே? அவரவருக்கு ஒரு தன்னம்பிக்கையும் சுதந்திரமும் கூட இருக்கும்.''

''அந்த உணர்ச்சிகள் மணமாகும்வரையில் தான் நீலா. அப்புறம் ஒருவர்மீது இன்னொருவருக்கு நம்பிக்கையும், ஒருவர் சுதந்திரத்தை இன்னொருவருக்காக விட்டுக் கொடுப்பதும் தான் அவசியமாக இருக்கும். தாம்பத்திய வாழ்க்கைக்கு அழகாகவும் இருக்கும்.''

''நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? அப்படியானால் நாம் மணம் செய்துகொண்ட பிறகு, வேலை பார்க்க நீங்கள் என்னை அனுமதிக்க மாட்டீர்களா?''

''நான் உன்னை வற்புறுத்த மாட்டேன். ஆனால் அது எனக்குப் பிடிக்காது. அவ்வளவு தான்.''

நீலா திடுக்கிட்டு நிமிர்ந்தாள். அவள் அப்படி வேலைக்குப் போனாலும், அவள் அவனைப் பிரியத்தால் கட்டி இணங்கவைக்க எடுக்கும் முயற்சி தோல்வியாகத்தான் இருக்கும். தன் உரிமையைச் செலுத்தி அவள் கீழ்ப்படிதலை வற்புறுத்த அவன் விரும்ப மாட்டான். மனமார்ந்த சம்மதத்துடன் கூடிய ஒத்துழைப்பையே அவன் நாடுவான். அந்த அளவுக்கு அவள் பிரியத்துக்கு அது தோல்வி தான்.

பள்ளிக்கூட நாள் முதலாகவே அவளுக்கு எழுதுவதில் ஓர் ஆசை. அப்போதே குழந்தைகள் பத்திரிகையில் எழுதுவாள். மேலே படிக்கப் படிக்க அதுவே அவள் வாழ்க்கையில் ஒரு பகுதியாகி விட்டது. அதற்காகவே தனியான பட்டப் படிப்பையும் விரும்பி எடுத்துக் கொண்டாள். பத்திரிகை அலுவலகத்தில் வேலை கிடைத்தபோது, அந்த ஆசையினாலேயே விரும்பி ஒப்புக் கொண்டாள். இப்போது அதை விட்டு விடுவதா? எந்த ஆசைக்கு முதல் இடம் இப்போது?

''என்ன யோசனை நீலா? நான் சொல்வது உனக்குச் சரியாகப் படவில்லையா?''

''என்னால் எப்படி எனக்கு மிகவும் பிடித்த வேலையை விட முடியும்? வருமானத்துக்காகச் சொல்லவில்லை. என் மனத் திருப்திக்காகச் சொல்கிறேன். நம்முடைய வீட்டை நன்றாகக் கவனித்துக் கொண்டு, உங்கள் தேவைகளைக் குறையில்லாமல் பார்த்துக் கொண்டு, சமையல் முதல் வீட்டின் பராமரிப்புவரை எதிலும் சிறு தவறுகூட விழுந்து விடாமல் பார்வை யிட்டுக் கொண்டு, உங்களுக்குப் பிடித்த மனைவியாக நான் இருப்பேன். ஆனால் எனக்கென்று இன்னொரு வாழ்க்கையும் இருக்கிறது. எழுதாமல் என்னால் எப்படி இருக்க முடியும்? என்னை நீங்கள் வீட்டிலேயே கட்டிப் போட்டு விட்டால், வெளி உலகத்தைக் கவனிப்பதிலும் கற்பனையில் பார்ப்பதிலும், பேட்டிகளில் பேசுவதிலும், என் எழுத்துக்களுக்கு உருவம் கொடுக்கும் என் ஆவல் எப்படி நிறைவேற முடியும்? எனக்கு அந்த வாழ்க்கையில் நிறைவு கிடையாது. பணத்துக்காகச் சொல்லவில்லை. மனத்திருப்திதான் முக்கியம்—''

''நானும் அதைத்தான் சொல்கிறேன் நீலா! எனக்கும் திருப்திதான் முக்கியம். நீ வெளியே போய் வேலை பார்த்துச் சம்பாதித்துஅதில் குடும்பம் நடத்தால், எனக்கு அந்த வாழ்க்கையில் நிச்சயமாகத் திருப்தி கிடைக்காது. எது நமக்கு அவசியமானாலும், அதை நான் சம்பாதித்து வாங்கிக் கொடுக்க என்னால் முடியும். உன்னுடைய வேலையை—''

''விடவேண்டும் என்கிறீர்கள்'' என்று மிகுந்த துயரத்தோடு கூறினாள் நீலா.

''நான் சொன்னதைத் தப்பாக எடுத்துக் கொள்ளாதே நீலா. உன்னைக் கட்டாயப் படுத்தமாட்டேன். நீ எழுத வேண்டும் என்று விரும்பினால் வீட்டில் இருந்தபடியே எவ்வளவு வேண்டுமானாலும் எழுது. என் மனைவி ஒரு மனக் குறையுடன் வீட்டில் வளைய வருவதை நான் விரும்பவில்லை.''

''உங்களுக்கு நான் இன்னும் மனைவியாகவில்லை — ''

'' ஆக வேண்டும். சீக்கிரமாகவே ஆக வேண்டும். என்ன சொல்லுகிறாய் நீலா ?''

அவள் கையைப் பிடித்துக் கொண்டான் அவன். அவள் தன் விரல்களை விடுவித்துக் கொள்ளவில்லை; மனத்தையும்தான்.

தேன் நிலவின் போது அவள் கை விரல்களை இதழ்களில் பதித்துக் கொண்டு அவன் சொன்னது நினைவிருக்கிறது. ''ஐ லவ்யூ! — ஒரு தடவை — இரண்டாவது தடவை — மூன்றாவது தடவை — '' என்று ஒவ்வொரு விரலையும் பிரித்து விட்டுக் கொண்டே...

நீலா சோபாவில் சாய்ந்தபடி விரல்களைப் பிரித்து விட்டுக் கொண்



டிருந்தாள். அவர்களுக்கு மணமாகி ஐந்து மாதங்கள் ஆகிவிட்டன.

"என்ன எண்ணுகிறாய், நீலா ?"

"ஒன்று... இரண்டு..., நமக்கு மணமாகி ஐந்து மாதங்கள் ஆகிவிட்டன. இன்னும் நாம் தனியாகத்தான் இருக்கிறோம். ஒருவருக்கு இன்னொருவர் துணையாக."

"உன் அம்மாவை வேண்டுமானால் கொண்டு வந்து வைத்துக் கொள்வோமா?" என்று கேலி செய்தான் ரமேஷ்.

அவள் சிரிக்கவில்லை. அவளை அந்த நினைவு உறுத்திக் கொண்டிருந்தது. ஒரு குழந்தை அவர்கள் குடும்பச் செலவுக்கு அதிகமாக ஆகிவிடும் என்று அவன் நினைக்கிறானா ? அப்படி அவன் நினைத்தால் அவள் ஒரு வேலையில் சேர்ந்து உதவ முடியாதா ?

நினைத்ததை அவள் சொன்னபோது அவன் முகத்தில் தணல் தெறித்தது. "இன்னும் ஒரு வருடத்தில் என் உத்தியோகம் உயர்ந்துவிடும் நீலா. அதுவரையில் நீ எனக்காகப் பொறுமையாக இருக்கக் கூடாதா?"

அவர்களிடையே உள் சரடாக ஓடிக் கொண்டிருந்த மறுப்பு. அப்போதுதான் முடிச்சாக வெளியே நெருடிற்று. அவளுக்கு ஏமாற்றம்தான். முதலில் அவள் வேலைக்குப் போக வேண்டும் என்று நினைத்த ஆசைக்குத் தடை. இப்போது இன்னோர் ஆசைக்கும் ஒரு தடை....

ரமேஷுக்கு வேலை உயர்வு கிடைக்கவில்லை. பெரிய நிறுவனம் ஒன்று, அவன் வேலை பார்த்துக் கொண்டிருந்த நிறுவனத்தை எடுத்துக் கொண்டுவிட்டது. மூன்று மாதச் சம்பளத்தைக் கையில் கொடுத்து, அவனை வீட்டுக்கு அனுப்பிவிட்டார்கள்.

வேலை போனதும் வீட்டுக்கு வந்ததும்கூட அவளுக்கு வருத்தமாக இல்லை. ஆனால் அவனுடைய தன்னம்பிக்கையிலும் மன உறுதியிலும் விழுந்த இடி ! அந்த அதிர்ச்சிதான் அவளால் பொறுத்துக் கொள்ளக் கூடியதாக இல்லை.

புதிய வேலைக்கு மனுப் போட ஆரம்பித்தான். ஒவ்வொரு தடவையும் 'இல்லை' என்ற பதில் வரும்போதெல்லாம், அந்த அதிர்ச்சி புதிதாக உயிர் பெற்று எழுந்து நிற்கும். அன்று முழுதும் பேசமாட்டான்.

வீட்டில் வசதிகள் சுருங்கி விட்டன' பொழுதுபோக்கு என்று வெளியே போவ தில்லை. பொழுது போக எழுதிக் கொண்டிருந்தது போக, அவள் இப்போது அவசியத்துக்காக எழுத வேண்டி இருந்தது. அவளுக்கு நேரம் போதவில்லை.

ஆட்டம் முடிந்து கூட்டம் கலைந்து, வெறும் நாற்காலிகளும் மேடையும் மாத்திரம் நிற்கும் கொட்டகை போன்ற வெறிச்சோடிய வீடு. கலகலப்பாக இருக்க முயன்றாலும் அதற்குச் சம்பந்தமற்ற எண்ணங்கள் எதிரொலித்துக் கொண்டிருக்கும்.

அவளுக்குப் பத்திரிகைகளிலிருந்து 'செக்'கும் மணியார்டரும் வரும். மௌனமும் ஆழமும் 'நிறைந்த கண்களுடன் ரமேஷ் அதைக் கவனித்துக் கொண்டிருப்பான். அவனுடைய பெருமையில் அடி விழுந்த வேதனை அந்தப் பார்வையில் தெரியும்.

"எனக்கு ஒரு நல்ல வேலை கிடைத்ததும், இவ்வளவையும் நான் வட்டியும் முதலுமாகத் திருப்பி விடுவேன், நீலா !"

இது என்ன வேடிக்கையான போட்டி மனப்பான்மை ? யாருக்கு யார் கடனைத் திருப்புவது ? அப்படி ஒரு வேலை கிடைக்காவிட்டால் ? நினைக்கும்போதே அவளுடைய உடல் சிலிர்த்தது.

வீட்டு வேலைகளைப் பெரும் பங்கு அவனே பகிர்ந்து கொள்வான். ரேஷன் கடைக்குப் போய்வருவான். அவளுடைய சௌகரியங்களைக்கூடக் கவனித்துக் கொள்வான். அவற்றில் அவனுக்கு ஒரு தீவிரம் இருந்தது. ஆனால் அன்பு கனியும் ஈடுபாடு இல்லை. அதனால் அவை இயல்பாகவும் இல்லை.

அவள் எழுதுவதும்கூட வழக்கம்போல் இயற்கையாக இல்லை. எளிமையும் அழகும் ததும்பும் கற்பனையின் பிரதிபலிப்பு அவைகளில் இல்லை. சொல்ல முடியாத வேதனை ஒன்றுதான் உருவம் தெரியாமல் நிழல் காட்டிற்று.

ஒருநாள் அவன் சொன்னான்: "சீக்கிரம் எனக்கு வேலை கிடைக்க வேண்டும் நீலா. இல்லாவிட்டால் இப்படியே நான் உனக்குப் பாரமாகத் தொடர்ந்து இருந்து கொண்டிருக்கமாட்டேன்." அவன் குரலில் அலுப்புத் தட்டிற்று.

"சொல்லாதீர்கள். அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்" என்று அவசரமாக அவன் உதடுகளின் மேல் விரல்களைப் பொத்தினாள். விரல்களைப் போல் அவள் மனமும் தத்தளித்தது.

தில்லியிலிருந்து அந்த அழைப்பு வந்திருந்தது. அதை அவள் எதிர்பார்க்கவே இல்லை. 'வருந்துகிறோம்' என்ற குறிப்பைப் படிக்கத்தான் உறையைக் கிழித்தாள். 'தமிழ் நாட்டில் எங்கள் சாதனங்களை விற்கத் திட்டமிட்டிருக்கிறோம். அது பற்றி எங்களுக்கு யோசனை சொல்ல, தமிழ் நாட்டிலிருந்து அனுபவம் வாய்ந்த ஒரு 'கெமிஸ்ட்' தேவை. அதற்காகவே உங்களை அழைக்கிறோம். ஆனால் இதையே 'ஆர்டர்' என்று எண்ணிவிடவேண்டாம். தற்பொழுது இதற்காக யாரையும் வேலையில் வைத்துக் கொள்வது பற்றி நாங்கள் தீர்மானம் செய்யவில்லை...."

"ஒரு வேளை எனக்குத் தில்லியில் இந்த வேலை கிடைத்துவிட்டால், அங்கே வந்

---



## பாரதி விழா புதுமை - 5

குயில் பாட்டுப் பற்றி அவ்வை நடராஜன் பேச ஆரம்பிக்கும்போதே ரொம்ப நேரமாகி விட்டது. எனவே அவர் குயில் பாட்டு பாணியிலேயே சொன்னார்:

நேரம் ! நேரம் ! நேரம் !<br>
நேரம் ஆயின், நேரம் ஆயின் (என் பேச்சு)<br>
பாரம், பாரம், பாரம்!

இருக்க உனக்கு ஆட்சேபனை ஏதும் இல்லையே ?'' என்று கேட்டான் ரமேஷ்.

''ஆட்சேபணையா ? ராமன் இருக்கும் இடம்தான் அயோத்தி — '' என்று அவன் முகத்தைக் கைகளால் தேக்கிக் கொண்டாள் நீலா. கண்ணுக்குள் கண் தெரியும் பார்வை. அங்கே ஒரு சிறு நிழலும் படலமாடிற்று.

''அப்படி எனக்கு வேலை கிடைக்காவிட்டால், நான் வெறும் கையோடு திரும்பி வர மாட்டேன். ஒரு வேலையில் சேராமல் மறுபடியும் இந்த வீட்டில் காலடி எடுத்து வைக்க மாட்டேன்.'' சொல்லிக் கொண்டே வருகையில் அவனுக்கு முகம் சிவந்துவிட்டது. நடு நெற்றியில் நரம்பு கிளைவிட்டுப் புடைத்தெழுந்தது. அந்நிலையில் அவனைப் பார்க்கையில் அவளுக்கு நெஞ்சில் வேதனை பொங்கிற்று.

''கிடைக்கும். நிச்சயமாகக் கிடைக்கும். கவலைப்படாதீர்கள்!'' யாருக்கு அந்த ஆறுதல்? அவளுடைய குரல் தன்னைத்தானே தேற்றிக் கொள்வதைப் போலத் தோன்றிற்று.

ஊருக்குக் கிளம்பியாயிற்று. அவளை ஸ்டேஷனுக்கு வர அவன் அனுமதிக்கவில்லை. ''அப்புறம் நீ இரவில் தனியாகத் திரும்பி வர வேண்டும். இங்கேயே சொல்லிக் கொள். அது போதும்'' என்று சொல்லிவிட்டான்.

'' போய்ச் சேர்ந்ததும் எனக்குக் கடிதம் போடுங்கள். உங்கள் வேலை மும்முரத்தில் என்னை மறந்து விடாதீர்கள்.''

'' சே, எல்லோரையும் போல் என்னையும் நினைத்துக் கொண்டாயா நீலா ? இனிமேல் என் கஷ்டங்கள் எல்லாம் என்னுடையவை. என்னுடைய மகிழ்ச்சி எல்லாம் உன்னுடையவை !'' அவள் அருகே வந்து அவன் தோளின் மேல் கையை வைத்தாள். அவளுடைய கண்கள் கலங்கி யிருந்தன.

இப்போது இந்த நீண்ட கடிதத்தில் அவன் கொட்டி யிருக்கும் உணர்ச்சிகள் என்ன ? அவனுடைய கஷ்டங்களா ? மகிழ்ச்சியா ? போய்ச் சேர்ந்து அவ்வளவு விரைவில், அப்படிக் கொட்டிக் கொட்டி எழுத மகிழ்ச்சி நிறைந்த செய்தி எவ்வளவு இருக்க முடியும் ?

அவள் எதிர்பார்த்த ஏமாற்றம் தரும் முடிவு. அங்கே போனதும் தெரிந்திருக்கக் கூடும். அந்த வேதனையைத்தான் இங்கே கடிதத்தில் கொட்டி இருக்கிறான்.....

அவளால் அந்தக் கடிதத்தை ஊகிக்கக்கூட முடிந்தது. அதில் இப்படித்தான் எழுதி இருப்பான் —

''நீலா டார்லிங் ! உனக்கு இது வியப்பாக இருக்க முடியாது. ஆனாலும் இதை எழுத என் மனம் மிகவும் சிரமப்படுகிறது. நீ துடித்துப் போவாய். எனக்குத் தெரியும். இதைப் படிக்கும்போதே உனக்கு அழுகை வருகிறது. என்னுடைய முடிவுக்குக் காரணங்கள் எல்லாவற்றையும் இங்கே விளக்கமாக எழுதி இருக்கிறேன். ஆனால் முதலில் முடிவைச் சொல்லிவிடுகிறேன். நான் அங்கே திரும்பி விடுவேன் என்று எதிர்பார்க்காதே.....''

அவளுடைய கற்பனையா ? எண்ணங்களிலேயே தோய்ந்துவிட்ட கனவா ? அல்லது உண்மையே அதுதானா ?

## பாரதி விழா புதுமை - 6



சம்பிரதாயத்தில் ஊறிய நெஞ்சங்கள், காதலை ஏற்க மறுப்பதைப் பாரதி எங்ஙனம் பாடியுள்ளார் என விளக்கினார் கலைஞர்:

நாடகத்தில் காவியத்தில் காதலென்றால்
நாட்டினர்தான் வியப்பெய்தி நன்றாம் என்பர்
ஊடகத்தே வீட்டினுள்ளே கிணற்றோரத்தே
ஊரினிலே காதலென்றால் உறுமுகின்றார்
பாடை கட்டி அதனைக் கொல்ல வழி செய்கின்றார்
பாரினிலே காதலென்னும் பயிரை மாய்க்க
மூடரெல்லாம் பொறுமையினால் விதிகள் செய்து
முறை தவறி இடரெய்திக் கெடுகின்றாரே!

இப்பாடலில் உள்ள நகைச்சுவையழகையும், 'உறுமுகின்றார்' என்ற சொல் எத்தனை பாங்காக விழுந்திருக்கிறது என்பதையும் எடுத்துச் சொன்னபோது அவையோர் நகைத்தனர். அடுத்து முதல்வர், பாடை கட்டிய பிறகுதான் கொல்ல வழி செய்வார் என்று பாரதி கூறியிருப்பதை உன்னி நோக்குங்கள் என்றதும் அவையோர் நெகிழ்ந்தனர். கடைசி மூன்று வரிகளை முதல்வர் உணர்ச்சி வசப்பட்டு மூச்சு விடாமல் கூறி முடித்தபோது அவையோர் மெய் சிலிர்த்தனர்.

---

அவள் கடிதத்தைப் பிரிக்கவில்லை. சாப்பிடவும் பிடிக்கவில்லை. அரை மயக்கமும் தூக்கமுமாகப் படுத்திருந்தாள். கதவை யாரோ தட்டும் சத்தம் கேட்டது. எழுந்து போய்க் கதவைத் திறந்தாள். சுஜாதா அங்கே நின்று கொண்டிருந்தாள்.

'' எவ்வளவு நேரமாகக் கதவை இடிப்பது ? என்ன செய்து கொண்டிருந்தாய் ? ஏதாவது கற்பனையில் மூழ்கிப் போயிருந்தாயா... ?''

கற்பனைதான். ஆனால் இது கதை எழுதுகிற கற்பனை இல்லை. அவளிடம் எப்படிச், சொல்வது ?

சுஜாதா உள்ளே வந்து விட்டாள். பேசிக் கொண்டே, சிரித்துக் கொண்டே ஒவ்வோர் அறையிலும் சாமானைக் குடைந்து கொண்டிருந்தாள்.

'' ஏன் நீ சாப்பிடவே இல்லை ? சமைத்ததெல்லாம் அப்படி அப்படியே இருக்கிறதே ? சாப்பாடு இறங்கவில்லையா ? ஒருவேளை நீயும் — '' அவள் கண் நரம்புகள் குறும்பில் குறுகுறுத்தன. இமைகள் சிமிட்டின. நீலாவின் முகம் சிவந்தது.

''அப்படி எல்லாம் ஒன்றுமில்லை, சுஜாதா. நாங்கள் அவசரப்படவில்லை. 'நீயும்' என்கிறாயே ? அப்படியானால்—''

சுஜாதா பதில் சொல்லவில்லை. அதற்கு அவசியமில்லாமல் இருவர் சிரிப்பும் தன்

ணீரில் கூழாங் கல்லை எறிந்தாற் போல் 'ஜிலுக்'கென்று கலந்தது.

சட்டென்று சுஜாதாவின் பார்வை மேஜையின் மீது திரும்பிற்று. ''அடேடே! இதென்ன ரிஜிஸ்தர் தபால்? ஏன் உடைக்க வில்லை?'' என்று கையில் எடுத்தாள். ரமேஷின் கையெழுத்தையும் விலாசத்தையும் பார்த்ததும் அவள் பார்வையில் குறும்பு மிளிர்ந்தது.

''ஓ! அவருடைய கடிதமா? நான் தொடவில்லை. நான் போனபிறகு நீயே நிதானமாகப் படித்து அனுபவிக்கலாம்'' என்று அவள் கன்னத்தைச் செல்லமாக நிமிண்டினாள்.

சுஜாதா கிளம்பிப் போய் விட்டாள். நீலா வாசற் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு உள்ளே வந்தாள். அந்தக் கடிதத்தைக் கையில் எடுத்துக் கொண்டு சோபாவில் படுத்துக் கொண்டாள்.

இனிமேல் பொறுக்க முடியாது; பிரித்துப் படித்துத்தான் ஆக வேண்டும்; அதில் என்ன எழுதி யிருந்தாலும் சரி. சதுரமான, கையால் செய்து ஒட்டிய கனமான கவர். அதில் அவளுக்கு என்ன காத்திருந்தது?

பிரித்ததும் அதிலிருந்து சிறு கடிதம் விழுந்தது. அவசரமாகக் கிறுக்கலில் எழுதிய எழுத்துக்கள்.

''நீலா டார்லிங்! உனக்கு ஒரு சந்தோஷ சமாசாரம். மூச்சைக் கெட்டியாகப் பிடித்துக் கொள். எனக்குச் சென்னையிலேயே வேலை கிடைத்துவிட்டது. என்னை இங்கே 'மேனேஜ் மெண்ட்'டுக்கு ரொம்பப் பிடித்துப் போய் விட்டது. என்னோடு நான்கு மணி நேரம் பேசினார்கள். சென்னையில் ஒரு கிளை நிறுவனம் ஆரம்பிக்க முடிவு செய்தாயிற்று. அதற்கு நான்தான் நிர்வாகப் பொறுப்பு. ஆனால் அது வரையில் ஒரு மாதம் இங்கே இருந்து இவர்களுடைய தயாரிப்பு, விற்பனை எல்லாவற்றையும் கவனித்துப் பழகிக் கொள்ள வேண்டும்.

இப்போதே என்னால் உன்னைப் பிரிந்திருக்க முடியவில்லையே? முப்பது நாட்கள் எப்படிப் பிரிந்திருக்கப் போகிறேனோ? நீ தில்லிக்கு வரத் தயாரா என்று நான் உன்னை வரும்போது கேட்டேன். இப்போது நான் சென்னைக்கு வந்துவிடப் போகிறேன். ராமன் இருக்குமிடம் அயோத்தியும் இல்லை; தில்லியும் இல்லை; சென்னைதான்....

ஸாரி.... முக்கியமான விஷயத்தை விட்டு விடப் போகிறேன். நீ எனக்காக மடித்து வைத்த துணிகளுக்கு நடுவில் ரேஷன் கார்டும், காப்பிக்கொட்டைக் கார்டும் இருந்தன. அவற்றைக் காணாமல் நீ திண்டாடப் போகிறாயே என்று அவசரமாக ரிஜிஸ்தர் தபாலில் உடனே அனுப்பி வைக்கிறேன். கொஞ்ச நாட்களாக நானே கடைக்குப் போய்க்கொண்டிருந்ததால் இந்த இரண்டு கார்டுகளும் என்னுடைய துணி 'ஷெல்பி'ல் இருந்திருக்க வேண்டும். அதுதான் கலந்துபோய் இங்கே வந்துவிட்டது.

இவை வந்து சேர்ந்ததற்கு உடனே பதில் போடு. மற்றவை அப்புறம். என்னால் கற்பனை செய்து பார்க்க முடிகிறது. இந்தக் கடிதத்தை நீ உன் உதட்டின் அருகே கொண்டு போய் —

உன்
ரமேஷ்.'

கண்கள் ஆவலில் விரிய, கைகள் நிதானமின்றி நடுங்க, நீலா அந்தக் கடித உறையை உதறினாள். அதிலிருந்து அந்த இரண்டு கார்டுகளும் கீழே அவள் மடி மீது விழுந்தன.

கடிதத்தை ரமேஷ் எழுதி யிருந்ததுபோல் அவள் ஒன்றும் செய்யவில்லை. அந்தக் கார்டுகளைத்தான் கையில் எடுத்து மகிழ்ச்சி பொங்க உதட்டருகே கொண்டு போய்....

நினைத்தாலே சலிப்பைத் தூண்டும் அந்த ரேஷன் கார்டுகளை, ஒரு குடும்பத் தலைவி அவ்வளவு அருமையாக எடுத்து ஒற்றிக் கொண்டது. சரித்திரத்திலேயே அதுதான் முதல் தடவையாக இருந்திருக்க வேண்டும்....

---

## பாரதி விழா புதுமை – 7

சிலம்பொலி செல்லப்பன் பாஞ்சாலி சபதம் பற்றிய விளக்க உரை நிகழ்த்தினார். கணக்காசிரியரான அவரது உதாரணங்களும் பள்ளிப் பாடங்களை யொட்டியே வந்தன! இத்தனை விகிதத்தில் பாலில் நீர் கலந்தால் என்று கணக்குக் கொடுப்பது மாணவர் மனத்தைக் கெடுக்குமாதலால் இத்தனை சதவிகிதத்தில் பாலில் தேன் கலந்திருந்தது என்று நான் கணக்குத் தந்தேன். கல்வி அதிகாரிகள் அது மரபுக்கு ஒத்து வராது என்று கூறி விட்டார்கள்!

பாஞ்சாலி சபதத்திலோ பாரதி புதுமையைப் புகுத்தியபோதே மரபையும் விடாமல் பிடித்துக் கொண்டிருக்கிறான்! இதனை எடுத்துக்காட்டுக்களுடன் விவரித்த செல்லப்பன், புதுமைக் கவிதை எழுதுவோரெல்லாம் இவ்விஷயத்தில் பாரதியின் அடிச்சுவட்டைப் பின்பற்ற வேண்டும் என்றும் அதுமட்டுமின்றி ஆபாசத்தை அறவே தவிர்க்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.





## பாரதி விழா புதுமை – 8

ஹிட்லர் ஆட்சி காலத்தில் கணக்கு இப்படி இருக்குமாம்: ஒரு ஜெர்மன் விமானம் மணிக்கு 250 மைல் வேகத்தில் பறந்து லண்டன் மீது குண்டு போட்டுவிட்டுத் திரும்ப எத்தனை நேரமாகும்? இவ்வாறு அவன் தேசம் முழுவதையும் தன் லட்சிய நோக்கில் (இது தவறான லட்சியமாகிவிட்டது வேறு விஷயம்) திருப்பி விட்டான். இங்கே நாம் கணக்கு எப்படிச் சொல்லித் தருகிறோம்? - ஏழில் ஒன்பது போகாது; பக்கத்திலிருந்து கடன் வாங்கு!

-சிலம்பொலி செல்லப்பன்

ரேஸர் வெட்டும் ரோமக் கட்டையும்
ஏற்படும்போது வெட்கப்படுங்கள்...
அல்லது



# ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர் தரும் பட்டு மேனியால் பெருமைப்படுங்கள்

ஷேவிங் வேண்டாம், அது ஆண்களுக்கு மட்டுமே! தவிர, உங்கள் சருமத்தை வெட்டி வதைக்கும்...,ரோமம் கட்டையாக வளரும். இதோ ஒரு விடிவு-பெண்மைக்கே உரிய நளினமான வழியில் வேண்டாத ரோமத்தை விரட்டியடிக்கலாம்.மென்மையான ஆன் பிரஞ்ச் ஹேர் ரிமூவர்-இந்த க்ரீமை வேண்டாத ரோமத்தின் மீது தடவுங்கள். சிறிது நேரம் கழித்துத் துடைத்து எடுங்கள். ஆஹா! உங்கள் மென்பட்டு மேனி கண்டால் கண்பட்டு விடாதோ! இந்த க்ரீம் சருமத்தின் உட்சென்று வேலை செய்து வேண்டாத ரோமத்தை வழியனுப்புகிறது...வாரக்கணக்கில் பட்டுப் போல் மென்மை—தொட்டுப் பார்த்தால் மழமழப்பு...பெண்மையின் நளினத்தைப் பேசுகிறது உங்கள் மேனி-இல்லையா? எனவே இக்கணமே ரேஸருக்கு வழியனுப்பு: ஆன் பிரஞ்ச் ஹேர் ரிமூவருக்கு வரவேற்பு!



## ஆன் பிரெஞ்ச்

### ஹேர் ரிமூவர்

அருவருப்பூட்டும் ரோமத்தை அகற்றும் அருமையான க்ரீம்




2 சைஸ்களில் கிடைக்கிறது : 40 கிம் மற்றும் 75 கிம்.

Licensed User of TM : Geoffery Manners &Co. Ltd.

126 HR-182 Tam



# கடைசிப் பக்கம்

## கண்ணதாசன்

### மூட நம்பிக்கை

ஆண்டவன் மீதும் சாஸ்திரங்கள் மீதும் நாம் வைக்கும் நம்பிக்கையே 'மூட நம்பிக்கை' என்று சொல்லும் 'பகுத்தறிவாளர்கள்' உண்டு.

அவர்களுடைய நம்பிக்கைகள் எல்லாம் 'கெட்டிக்காரத்தனம்' என்றும், நம்முடைய நம்பிக்கைகள் மட்டும் 'மூடத்தனம்' என்றும் அவர்கள் கருதுகிறார்கள்.

நான் சொல்கிறேன், நம்பிக்கையில் மூட நம்பிக்கை, குருட்டு நம்பிக்கை, கெட்டிக்கார நம்பிக்கை என்று எதுவும் கிடையாது.

சொல்லப் போனால் நம்பிக்கை என்பதே ஒரு மூடத்தனம். அதிலே தனியாக ஒரு மூட நம்பிக்கை ஏது ?

நாட்டு மக்கள் எல்லோரையுமே நாத்திகர்களாக ஆக்கிவிட முடியும் என்று நம்பித்தான் பெரியார் பிரசாரம் செய்தார்; அந்த நம்பிக்கை எப்படி முடிந்தது ?

திராவிடநாடு கிடைக்கும் என்ற நம்பிக்கையில்தான் அந்தக் காலத்தில் பலர் தி. மு. க.வில் சேர்ந்தார்கள். அதன் கதி என்ன ?

தனுஷ்கோடி எக்ஸ்பிரஸில் போனவர்கள் ஊர் போய்ச் சேரலாம் என்ற நம்பிக்கையில் தான் போனார்கள்.

அந்த நம்பிக்கை மூடத்தனம் என்பதை அரியலூர் நிரூபித்தது.

நம்பிக்கை என்பது, இப்படி நடக்கும் என்று ஆசைப்படுவது. அப்படி நடக்காமலும் போய்விடலாம். அப்போது அது மூடத்தனமாகி விடுகிறது !

மகன் கல்லூரிக்குக் கட்டப் போகிறான் என்று நம்பித்தான் தகப்பன் பணம் அனுப்புகிறான்; அவன் அதை எப்படியும் செலவழிக்கலாம்.

அழகான ஹோட்டல்; அருமையான சாப்பாடு; ஆரோக்கியமான முறையில் சமைக்கப்பட்டிருக்கும் என்று நம்பித்தான் சாப்பிடுகிறோம். சமையற் கட்டில் என்ன என்ன நடந்திருக்குமோ யார் கண்டது ?

'இவர் நமது ஒழுங்கான பிரதிநிதியாக இருப்பார்' என்று நம்பித்தான் மக்கள் ஒருவருக்கு வோட்டளிக்கிறார்கள்; அவர் எப்படியெப்படியோ மாறிவிடுகிறார் !

நம்பிக்கை வெற்றிபெறும் போது மட்டுமே கெட்டிக்காரத்தனம் போல் காட்சி அளிக்கிறது; மற்ற நேரங்கள் அனைத்திலும் அது மூடத்தனம்தான் !

ஆண்டவனை நம்புவதிலும் அதே நிலைதான்!

அது தோல்வியுற்றால் மூடத்தனம்; வெற்றி பெற்றால் கெட்டிக்காரத்தனம்.

ஆகவே நம்பிக்கை என்ற மூடத்தனம் மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவனுக்கும் உண்டு.

அதில் ஆஸ்திகன் மட்டுமென்ன தனி ஜாதி!

இது வரை எந்த நம்பிக்கை எல்லா நேரங்களிலும் பலித்திருக்கிறது?

ஆனால் நம்பிக்கை என்ற மூடத்தனத்தை ஏன் எல்லோருமே மேற்கொள்கிறார்கள்?

அதிலே மனத்துக்கு ஒரு சாந்தி.

தெய்வ நம்பிக்கை, நிம்மதிக்கும் மகிழ்ச்சிக்குமாகவே ஏற்பட்டது.

விஞ்ஞான நம்பிக்கையைப் போல் ஒரு கட்டத்தில் தோல்வியுற்றாலும், மறு கட்டத்தில் வெற்றிபெறுவதுதான் தெய்வநம்பிக்கை.

ஒரு சூத்ரதாரியின் கைப் பொம்மைகள் நாம் என்பது மறுக்க முடியாதது.

மரணம் என்ற ஒன்று, அதைத் தினசரி வலியுறுத்துகிறது.

இவ்வளவுக்குப் பிறகும், தெய்வ நம்பிக்கையைச் சிலர், 'மூட நம்பிக்கை' என்பார்களானால், 'நான் ஒரு மூடன்' என்று சொல்லிக் கொள்வதிலே பெருமைப்படுகிறேன்.

முட்டாள்தனத்தில் இருக்கிற நிம்மதி, கெட்டிக்காரத்தனத்தில் இல்லை.

உடம்பிலே எல்லா நோயும் இருந்தும், 'ஒன்றுமே இல்லை' என்று நம்புகிற முட்டாள் ஆரோக்கியமாகவே இருக்கிறான்.

ஒரு நோயும் இல்லாமலேயே ஒவ்வொரு மயிர்க்காலையும் பார்த்து, 'இது அதுவாக இருக்குமோ' என்று ஆராய்ச்சி செய்கிற அறிவாளி, நித்திய நோயாளியாகச் சாகிறான்.

'சுடு' என்று சொன்னவுடனேயே யாரைச் சுடுகிறோம் என்று பார்க்காமலேயே சுடுகின்ற படைகள்தாம் நாட்டுக்கு வெற்றித் தேடித் தந்திருக்கின்றன.

அந்த நேரத்தில் படைகள் பகுத்தறிவை உபயோகிக்கத் தொடங்கினால், பகுத்தறிவு மிஞ்சும்; நாடு மிஞ்சாது.

போரில் தயக்கம் காட்டிய அர்ஜுனனைப் பார்த்துக் கண்ணன் அதைத்தான் சொன்னான்.

'போர் என்று வந்தபின் உறவினர்கள் என்ற ஆராய்ச்சி வெற்றிக்கு உதவாது' என்றான்.

கடைசியில் கண்ணன் மீது மூட நம்பிக்கை வைத்துத்தான் அர்ஜுனன் காண்டீபத்தைத் தூக்கினான்; முடிவு வெற்றியாகக் கனிந்தது.

கீதையில் கர்மயோகம் மானிடக் கடமைகளை வலியுறுத்துகிறது.

பக்தி யோகம், தியானத்தை வலியுறுத்துகிறது.

கடமையும் நம்பிக்கையுடன்தான் நடைபெறுகிறது; தியானமும் நம்பிக்கையுடன் தான் நடைபெறுகிறது.

'மனம் உண்டானால் வழி உண்டு' என்பது பெரியோர் வாக்கு.

அது மானிட கர்மத்துக்கும் பொருந்தும், தியான தர்மத்துக்கும் பொருந்தும்.

ஆகவே தெய்வ நம்பிக்கையை மூட நம்பிக்கை என்று சொல்வதைப் பற்றி நான் வருந்தவில்லை.

''இந்த மூடனும் அந்த அறிவாளியும் நம்மிடம்தான் வரப் போகிறார்கள்'' என்ற நம்பிக்கை தெய்வத்துக்கு இருக்கிறதே, யார் என்ன செய்ய முடியும் !

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# டிஸ்கான்

## 40% எஃகினை மீதப்படுத்தும் உறுதியான பிடிப்பு

டிஸ்கான் பார்கள் ரீ-இன்ஃபோர்ஸ்ட் கான்கிரீட் வேலைகளுக்கு வலிமையளிக்கின்றன. 40% எஃகினை மீதப்படுத்த உதவுகின்றன. கட்டிடங்கள், இணைப்புப்பாலங்கள் அணைக்கட்டுகள், ரிஸர்வாயர்கள், அஸ்திவாரங்கள், நீர்ப் பாசனத் துறை மற்றும் மின்சார சம்பந்தக் கட்டிட வேலைகளில் டிஸ்கான் கோல்ட் ட்விஸ்டெட் பார்கள் சிக்கனத்தை ஏற்படுத்துவதோடு வலிமையூட்டுகின்றன.

சொந்தமாகவே நம் நாட்டிலேயே தயாரிக்கப்படும் ஹை ஸ்ட்ரெங்த் பார் டிஸ்கான் மட்டுமே ஆகும். இது டாடா ஸ்டீலின் அதிநவீன விஞ்ஞான முறைகளின் விளைப்பயனாகும். ரூர்கியில் உள்ள ஸ்ட்ரக்சரல் எஞ்ஜினீயரிங் ரிஸர்ச் சென்டர் மூலம் உள்நாட்டு ஆராய்ச்சித் திறன், வேலைத்திறன் இவற்றை க்ரிப் பார்த்துறையில் பயன்படுத்தி டாடா ஸ்டீல் மதிப்புள்ள அந்நியச் செலாவணியை மீதப்படுத்த உதவியுள்ளது.

ஒவ்வொரு டிஸ்கான் க்ரிப் பாரும் ஐஎஸ்ஐ தரநிர்ணயம் ஐஎஸ் 1786க்குட்பட்டுள்ளது. மேற்பட்ட விவரங்களுக்கு எழுத

வேண்டிய முகவரி:
தி டைரெக்டர் ஆஃப்
மார்க்கெட்டிங் & ஸேல்ஸ்
தி டாடா அயர்ன் அண்ட்
ஸ்டீல் கம். லிட்.
43, செளரிங்கீ ரோடு,
கல்கத்தா 700016.



**டாடா ஸ்டீல்**



TIS-9089

